இங்கே வருகிறார்களாயிற்று. *கானமும் வானரமுமான இவற்றுக்கு முகங்கொடுத்துக் கொண்டு நிற்கிற ஸௌசீல்ய குணத்தை அநுஸந்தித்து ஈடுபட்டவர்களாய் ஸ்ரீஸேநாபதியாழ்வான் தொடக்கமான நித்யஸூரிகள் திருவேங்கடமுடையானை ஸேவிக்க விரும்பி திவ்யபுஷ்பங்களை எடுத்துக்கொண்டு இங்கே வருகிறார்கள். அப்புஷ்பங்களைத் திருமலையப்பனுடைய பாதாரவிந்தங்களில் யதாக்ரமமாக ஸமர்ப்பிக்க சக்தராகாதபடி சீல குணத்திலே உருகி நிற்கிறார்களாதலால் அவர்களது கைகளிலிருந்து புஷ்பங்கள் அவசமாகவே சிந்துகின்றனவாம். அப்படிச் சிந்தின புஷ்பங்கள் செவ்வி குன்றாமல் விகாஸமும் பரிமளமும் மல்கி விளங்குகின்றனவாம் திருமலையின் நிலமிதியாலே. அப்படிப்பட்ட திருமலையில் அந்தமில் புகழ்பெற்று விளங்கா நின்றான் எம்பெருமான்.

அந்தமில் புகழ். என்றவிடத்துது ஈடு காண்மின்; -- "ஸ்ரீவைகுண்டத்தில் புகழுக்கு அந்தமுண்டுபோலே; அப்ராக்ருதமான விக்ரஹத்தோடே அவ்வடிவை அநுபவிக்கப் பாங்கான கரணங்களையுடையயாரைக் கொண்டு கிட்டினார்க்கு அநுபவ யோக்யனாய் இருக்கையாலே புகழ் ஸாவதியாய் இருக்கும் அங்கு. இங்கு ஆளியும் கோளரியும் பொன்மணியும் முத்தமும் பூமரமுமானவற்றுக்குத் தன்னைக் கொடுத்துக்கொண்டு நிற்கையாலே புகழுக்கு அந்தமில்லையிறே."

அண்ணல் மாயன் அணிகொள் செந்தாமரைக்
கண்ணன் *செங்கனிவாய்க் கருமாணிக்கம் *
தெண்ணிறைச் சுனைநீர்த் திருவேங்கடத்து *
எண்ணில்தொல்புகழ் வானவரீசனே.

| | |
|---|---|
| அணிகொள் | - அழகுபொருந்திய |
| செம் தாமரை கண்ணன் | - செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களை யுடையவனும் |
| செம் கனி வாய் | - சிவந்த கனிபோன்ற அதரத்தை யுடையவனும் |
| கரு மாணிக்கம் | - நீல ரத்னம் போல் திருமேனி விளக்கத்தை யுடையவனும் |
| தெள் நிறை சுனை நீர் | - தெளிவையும் நிறைவையும் உடைய சுனை நீர் பொருந்திய |
| திரு வேங்கடத்து | - திருமலையில் |
| எண் இல் தொல் புகழ் | - எண்ணிறந்த நித்ய கல்யாண குணங்களை யுடையவனும் |
| வானவர் ஈசன் | - நித்யஸூரிகட்குத் தலைவனுமான எம்பெருமான் |
| அண்ணல் | - நமக்குஸ்வாமியும் |
| மாயன் | - ஆச்சரிய சேஷ்டிதங்களையுடையனுமானவன் |

* (**அண்ணல்மாயன்**) ஆழ்வீர்! திருமலையில் அடிமைசெய்ய வேணுமென்று நீர் பார்க்கின்றீர். இஃது உமக்கு வாய்க்குமோ என்ன; எண்ணிறந்த நித்ய ஸித்த புருஷர்கள் எல்லாருக்கும் தன்னை அநுபவிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கிறானொரு பரமோபகாரகனல்லனோ அவன்; அன்னவன் நமக்கும் தன்னைத் தந்தருளுமென்கிறார்.

(எம்பெருமான் ஸ்வாநுபவத்தைநமக்குத் தந்தருள்வன் என்பது இப்பாசுரத்தில் கூறப்பட்டிருக்கவில்லையே என்னவேண்டா. எண்ணில் தொல்புகழ் வானவரீசனே என்ற ஈற்றடியில் இக்கருத்து உறைந்து நிற்கும். நமக்குத் தந்தருளாதொழிந்தானாகில் தொல்புகழுடைமை தேறுமோ என்றவாறு.)

**அண்ணல்** என்றதற்குப் பொருளருளிச் செய்யாநின்ற நம்பிள்ளை "குறிஞ்சி நிலத்தில் தலைமகனென்னுதல், ஸர்வஸ்வாமியென்னுதல்" என்றருளிச் செய்துள்ளார். அண்ணல்

என்கிற சொல் பொதுவாக ஸ்வாமியைச் சொல்லக் கடவதென்றும், சிறப்பாகக் குறிஞ்சி நிலத்தலைமகனைச் சொல்லக்கடவதென்றும் தமிழர் கூறுவர். இரண்டுவகையான பொருளும் அவ்விடத்திற்கு ஒக்கும். மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி நிலமென்க. தொல்காப்பியத்தில் பொருளதிகாரத்தில் இருபதாவது சூத்திரத்தின் உரையில், அண்ணல் என்பதற்கு முல்லை நிலத் தலைவன் என்ற பொருளும் கூறப்பட்டுள்ளது.

**மாயன்** =ஆச்சரியமான வடிவழகு முதலியவற்றை யுடையவன் என்றபடி. அவற்றில் ஒன்றை எடுத்துரைக்கிறார் **அணிகொள் செந்தாமரைக் கண்ணன்** என்று. "இக் கண்ணழகுடையவனுக்கு வேறொரு அலங்காரம் வேண்டா" என்னும்படி யிருப்பதாய், தனக்குத் தானே ஆபரணமாய், விகாஸம் செவ்வி குளிர்த்தி நறுமணங்களினால் தாமரையை ஒருவகைக்கு ஒப்பாகக் கொள்ளுமதான கண்ணழகை உடையவன் என்க. அடியார்களை முந்துற முன்னம் திருக்கண்களாலே கடாக்ஷித்து, பிறகு சோதிவாய்திறந்து வார்த்தை சொல்லுவானாதலால், திருக்கண்ணுக்கு அடுத்தபடியாகச் செங்கனிவாயை அநுபவிக்கிறார். * அபிமத ஜநதர்மநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்த மதுர மந்தஹாஸ விலாஸந்தன்னை அநுபவித்து அருளிச்செய்கிற வார்த்தை இது.

**செங்கனிவாய்** என்றதன் வியாக்கியானத்தில் (ஈட்டில்) "முறுவலாலே யாயிற்று இவரை யெழுதிக்கொண்டது" என்கிற ஸ்ரீஸூக்தி காணப்படுதலால் "அணிகொள் செந்தாமரைக் கண்ணன், **என் செங்கனிவாய்**" என்று பாடம் நம்பிள்ளைதிருவுள்ளம்பற்றியதாகுமென்று அழகிய மணவாளச்சீயர் (அஸ்மதாச்சார்யர்) அருளிச்செய்யக் கேட்டிருக்கை. என் என்றோ எம் என்றோ வருகிற விடங்களில் இங்ஙனம் வியாக்கியானிப்பது வழக்கமாதலால் இந்த ஊஹம் உரியதே.

**கருமாணிக்கம்** = இதனால் திருமேனியை நினைக்கிறது; உவமையாகுபெயர்.

**தெண்ணிறைச்சுனைநீர்** = இங்குப் பன்னீராயிரப்படி யுரைகாரரொருவர் மாத்திரம் "தெண்ணிறச் சுனைநீர்" என்று பாடங்கொண்டு 'தெளிந்த நிறத்தையுடைய' என்று பொருள் பணிக்கிறார். மற்ற வீயாக்கியானங்களில் நிறை என்ற பாடமே கொள்ளப்பட்டது. இப் பாடத்தில் "நிறைசுனை" என இயல் வாகவேண்டியிருக்க "**நிறைச்சுனை**" என்று சகர மிரட்டித்தது எங்ஙனே என்னில்; **நிறை** என்பதை வினைப்பகுதியாகக் கொள்ளாமல் முதனிலைத் தொழிற் பெயராகக் கொண்டு 'நிறைதலையுடைய' என்று பொருள்கொள்ளுமளவில் வல்லொற்று மிகுதல் பொருந்துமென்ப.

ஈசன்வானவர்க்கென்பன் என்றால் *அது
தேசமோ திருவேங்கடத்தானக்கு?
நீசனேன் நிறைவொன்றுமிலேன் * என்கண்
பாசம்வைத்த பரஞ்சுடர்சோதிக்கே.

| | |
|---|---|
| வானவர்க்கு | - நித்யஸூரிகளுக்கு |
| ஈசன் | - தலைவன் |
| என்பன் | - என்று சொல்லுவேன்; |
| என்றால் | - இப்படிச் சொன்னால் |
| நீசனேன் | - கடைகெட்டவனும் |
| நிறைவு ஒன்றும் இலேன் | - குணபூர்த்தியற்றவனுமான |
| என் கண் | - என் விஷயத்தில் |

| | |
|---|---|
| பாசம் வைத்த | - ஆசாபாசத்தை வைத்தருளிய |
| பரம் சுடர் சோதிக்கு | - நிரவதிக ஜ்யோதிர்மய திவ்யமங்கள விக்ரஹயுக்தனான |
| திரு வேங்கடத்தானுக்கு | - திருவேங்கடமுடையானுக்கு |
| அது தேசமோ | - நான் சொன்னது ஒரு பெருமையோ? |

∗ (**ஈசன்வானவர்க்கு**) "எண்ணில் தொல்புகழ் வானவரீசன்" என்றார் கீழ்ப்பாட்டில்; அதனால், நித்யஸூரிகளுக்குத் தன்னை அநுபவிக்கக் கொடுத்தானென்பதை ஒரேற்றமாக அருளிச்செய்தார். மிகவும் நீசனான என்பக்கலிலே பாசம் வைத்திருக்கும் அப் பெருமானுக்கு அது ஓர் ஏற்றமோ என்கிறார் இப்பாட்டில்.

'வானவர்க்கு ஈசன்' என்று சொல்லுகிறவிது திருவேங்கடத்தானுக்கு தேசமோவென்கிறார். ∗கானமும் வானரமும் வேடுமான மிவற்றுக்கு முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிறவன் நித்யஸூரிகட்கு முகங்கொடுக்கிறானென்பது எங்ஙனே ஏற்றமாகும்? ∗அயர்வறுமமர்களதிபதி யென்கை ஸ்ரீவைகுண்ட நாதனுக்கு ஏற்றமாகுமத்தனை யல்லது திருவேங்கடமுடையானுக்கு ஏற்றமாகாது காணும்.

அஃது ஏற்றமன்றாகில், பின்னை எதைத் திருவேங்கடமுடையானுக்கு ஏற்றமாக நீர் நினைக்கின்றீர்? என்ன; அதற்கு விடையளிக்கின்றார்போலும் பின்னடிகளால் -- "அமர்யாத: க்ஷுத்ரச் சலமதிரஸூயா ப்ரஸவபூ: க்ருதக்நோ துர்மாநீ ஸ்மரபரவசோ வஞ்சநபர:, ந்ருசம்ஸ: பாபிஷ்ட:" இத்யாதிப் புடைகளிலே ஆளவந்தார்போல்வார் அருளிச்செய்கிற கணக்கிலே மிகவும் நிஹீநனான என் திறத்தில் ஆசாபாசம் வைத்து அதனால் புகர்படைத்திருக்கின்ற எம்பெருமானை வானவரீசனென்பது என்ன பெருமை! என்றாராயிற்று.

**என்கண்பாசம்வைத்த** என்பதற்கு வேறுவகையாகவும் பொருளுரைப்பர். தன் விஷயமான பாசத்தை என் பக்கலிலே (எனக்கு) உண்டாக்கின என்று.

சோதியாகி எல்லாவுலகும்தொழும் ∗
ஆதிமூர்த்தியென்றால் அளவாகுமோ ?∗
வேதியர் முழுவேதத்தமுதத்தை ∗
தீதில்சீர்த் திருவேங்கடத்தானையே.

| | |
|---|---|
| வேதியர் முழு வேதத்து | - வைதிகர்களால் ஓதப்படுகிற ஸகல வேதங்களிலும் |
| அமுதத்தை | - பரமபோக்யனாக ப்ரதிபாதிக்கப்படுபவனும் |
| தீது இல் சீர் | - தீது ஒன்றுமில்லாத திருக்குணங்களையுடையனுமான |
| திரு வேங்கடத்தானை | - திருமலையப்பனைக் குறித்து, |
| சோதி ஆகி | - சோதிமயமான திருமேனியுடையனாய் |
| எல்லா உலகும் தொழும் | - உலகத்தவர்களெல்லாராலும் தொழப்படுபவனாய் |
| ஆதி | - ஸகல ஜகத்காரணபூதனான |
| மூர்த்தி | - ஸர்வேச்வரன் (இவன்) |
| என்றால் | - என்று நான் சொன்னால் (அது) |
| அளவு ஆகுமோ | - ஒரு பெருமையாகுமோ? |

∗ (**சோதியாகி**) நீசனான எனக்குத் தன்னைத் தந்தவனுக்கு நித்யஸூரி நிர்வாஹத்வம் ஒரேற்றமோ என்றார் கீழ்ப்பாட்டில். என்னிலும் தாழ்ந்தவர்களைத் தேடிப் பெறமாட்டாதே

இருக்கின்றவனுக்கு, எனக்குத் தன்னைத் தந்தானென்கிற இதுதான் ஓர் ஏற்றமோ என்கிறார் இப்பாட்டில்.

"எல்லாவுலகுந் தொழும் ஆதி மூர்த்தி" என்று இவர் கீழே சொல்லியிருந்தாலன்றோ இப்போது *எல்லாவுலகுந் தொழுமாதிமூர்த்தி என்றாலளவாகுமோ? * என்று சொல்லலாம். கீழ்ப்பாட்டில் அப்படியொன்றுஞ் சொல்லியிருக்கவில்லையே. மூன்றாம் பாட்டில் "வானவரீசனே" என்று சொல்லியிருந்ததனால் நான்காம் பாட்டில் "ஈசன் வானவர்க்கு என்பனென்னறால் அதுதேசமோ?" என்று சொன்னது பொருந்திற்று. இங்கு அங்ஙனம் பொருத்தமில்லையே! என்கிற சங்கைக்கு நம்பிள்ளை அருளிச்செய்கிற பரிஹாரத்தின் அழகைக் காண்மின்; -- "கீழே *நீசனேன் நிறைவொன்றுமிலேன் என்றாரே தம்மை; -- தாழ்வுக்குத் தம்மை எல்லாரிலும் அவவருக்காகச் சொன்னாரே; தாம் தொழுதபோதே எல்லா லோகங்களும் விழுக்காட்டாலே (அர்த்தாது) தொழுததாயிற்று. 'எல்லாவற்றுக்கும் மேல்படி அமிழ்ந்தது' என்றால், கீழ்ப்படி அமிழ்ந்தது என்று சொல்லவேண்டாவிறே." என்பவை ஈட்டு ஸ்ரீஸூக்திகள். இதனால் தேறினது என்னவென்றால், "நீசனேன் நிறைவொன்றுமிலேன் என்கண் பாசம் வைத்த பரஞ்சுடர்சோதிக்கே" என்று கீழ்ப்பாட்டில் கூறியதில் *எல்லாவுலகுந் தொழுமென்கிற அர்த்தம் ஸித்தமாகவேயுள்ளது என்று காட்டினபடி. ஒரு கலாசாலையில் மிகவும் மூடனான ஒருவன் பரீக்ஷை தேறிவிட்டானென்றால் மற்றையோர்கள் தேறினார்கள் என்பது எப்படி ஸித்தமோ அப்படியே ஆழ்வார் தாம் தொழுதமை சொன்னவளவில் எல்லாவுலகும் தொழுதமை சொன்னபடியேயாகுமென்க. என்கண் பாசம் வைத்தது ஓரேற்றமோ? என்றபடியாயிற்று முன்னடிகளால்.

இது ஏற்றமன்று என்று சொல்லலாம்படி இப்போது ஆழ்வார் அருளிச்செய்கிற குணோத்கர்ஷம் ஏதென்னில்; தீதில் சீர்த்திருவேங்கடத்தான் என்ற சொல்லின் ஆழ்பொருளைக் காணவேண்டும். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி -- எல்லாவுலகுந்தொழும் என்றதிற்காட்டில் தீதில்சீர் என்றவிடத்தில் ஏற்றம் என்னென்னில்; என்னை விஷயீகரித்தான் என்றவிது ஓரேற்றமோ? என்னில் தாழ்ந்தாரைத் தேடிக் கிடைக்காமையாலே பட்டினிவிட்டு "ஆமயா யதிவா ராம:" என்கிறபடியே அவஸர ப்ரதீக்ஷனாயிருக்கிறவனுக்கு.? *நீசனேன் நிறைவொன்றுமிலேனென்ற இவருடைய குற்றத்தை குணமாகக்கொண்டு ஸ்வீகரித்து, இவருக்கு அவ்வருகு குற்றமுடையாரைத் தேடிக் கிடையாமலே நிற்கிறானாயிற்று." என்பதாம்.

**தீதில்சீர்** என்ற விசேஷண ஸ்வாரஸ்யத்தை ஆழ்ந்து அறிந்து நம்பிள்ளை அருளிச்செய்துள்ள அர்த்த விசேஷம் மிகவும் ரஸிக்கத்தக்கது. சீர்க்குத் தீதில்லாமை எப்போது தேறுமென்னில் *நீசனேன் நிறைவொன்றுமிலேனென்னறு சொல்லுகிற இவரைக் காட்டிலும் மிகவும் நீசனான ஒரு வ்யக்தியைத் தேடிப்பிடித்தால்தான் தேறும். உண்மையில் அப்படிப்பட்ட வ்யக்தி உலகத்தில் கிடையாமையாலே எம்பெருமானுக்குக் கிடைக்கவில்லை. கிடைக்காவிடினும், என்றைக்காவது அப்படிப்பட்டவொரு வ்யக்தி கிடைக்காமற் போகுமா என்கிற நசையினால் திருமலையில் வீற்றிருத்தலும் சயினித்தலுமின்றிக்கே நின்றுகொண்டே 'ததந்வேஷண ஜாகரூகதையைக்' காட்டுகிறானாம் திருவேங்கடமுடையான். அதை ஆழ்வார் அனுஸந்தித்து இப்பாசுரம் அருளிச்செய்கிறார் கிடீர்.

**வேதியர் முழுவேதத்தமுதத்தை** = வேதியர்களென்று வேதமோதுகிறவர்களைச் சொல்லுகிறது. அத்யயநம் செய்பவர்களையிட்டு நிரூபிக்கப்படுவன வேதங்கள். (எங்ஙனேயென்னில்;) ஆதர்வணம் தைத்ரீயம், காண்வம் என்று வ்யபதேசங்கள் விளைந்திருப்பதானது அத்யேத்ருவைவித்யப்ரயுக்தமாகும். ஆசார்ய ஹ்ருதயத்தில் "ஓதுவாரோத்தாகையாலே ஆதர்வணாதிகள் போலே இதுவும் பேர்பெற்றது" என்றவிடமும்

அவ்விடத்து வ்யாக்யான ஸ்ரீஸூக்தியும் காணத்தக்கன. ஆக, வேதியர்களையிட்டு நிரூபிக்கப் படுவனவான ஸகலவேதங்களிலும் பரமபோக்யபூதனாயிருக்கின்ற எம்பெருமான் வேதாதிகாரமற்றவர்களுக்கும் எளியனாய்த் திருமலையில் ஸேவை ஸாதிக்கின்றான் என்றாராயிற்று.

வேங்கடங்கள் மெய்ம்மேல்வினைமுற்றவும் *
தாங்கள் தங்கட்கு நல்லனவேசெய்வார் *
வேங்கடத்துறைவார்க்கு நமவென்ன
லாங் கடமை *அதுசுமந்தார்கட்கே.

| | |
|---|---|
| வேங்கடத்து | - திருமலையிலே |
| உறைவார்க்கு | - நித்யவாஸஞ்செய்தருளுகிற பெருமானுக்கு |
| நம எனல் ஆம் கடமை அது | - நம: என்று சொல்லுவதாகிற அந்தக் கடமையை |
| சுமந்தார்கட்கு | - வஹிக்கின்றவர்களுக்கு |
| கடங்கள் | - அனுபவித்தே தீர்க்கவேண்டிய (பூர்வக்ருத) பாபங்களும் |
| மேல் வினை | - (ப்ரக்ருதி வாஸநையாலே) இனிவிளையக்கூடிய பாவங்களும் (ஆகிய) |
| முற்றவும் | - ஸகல பாபங்களும் |
| வேம் | - வெந்துபோயின வென்னும்படி அழிந்துவிடும்; (இப்படிப் பாவங்கள் தொலையவே) |
| தாங்கள் | - அடியவர்களான தாங்கள் |
| தங்கட்கு நல்லனவே | - தங்கள் ஸ்வரூபத்திற்குத் தகுதியானவற்றையே (கைங்கர்யங்களையே) |
| செய்வார் | - செய்யப்பெறுவர்கள். |

* (**வேங்கடங்கள்**.) இப்பதிகத்தில் முதற்பாட்டில் கைங்கர்யம் பிரஸ்தாவிக்கப்பட்டது; (அதன்மேல் நான்கு பாசுரங்கள் ப்ராஸங்கிகங்கள்.) முதற்பாட்டோடு இப்பாட்டிற்கு ஸங்கதி கொள்ளலாம். பிரதிபந்தகங்களான கருமங்கள் பலகிடக்க அடிமை செய்வது எங்ஙனே ஸாத்யம்? என்று சங்கை பிறக்க, அடிமைசெய்வோமென்று இசையவே அவை தானே தொலையும் என்கிறார் இப்பாட்டில்.

**கடம்** - கடன்; மகரனகரப் போலி. கடன்கள் வேம் =பிராமணன் பிறக்கும்போதே மூன்றுவகையான கடன்களோடு பிறக்கிறானென்று வேதம் ஓதுகின்றது. யஜுர்வேதத்தில் ஆறாவது காண்டத்தில் மூன்றாவது ப்ரச்நத்தில் "ஜாயமாநோஹவை ப்ராம்ஹணஸ்த்ரிபி: ருணவாஜாயதே, ப்ரஹ்மசர்யேணர்ஷிப்யோ யஜ்ஞேந தேவேப்ய: ப்ரஜயா பித்ருப்ய:, ஏஷவா அந்ருணோ ய: புத்ரீயஜ்வா ப்ரஹ்மசாரிவாஸீ" என்றுள்ளது. ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் கடன்பட்டவனாகியே ஜனிக்கின்றானென்றும், வேதாத்யயனம் முதலியவற்றால் ரிஷிகளின் கடனையும், யஜ்ஞங்களால் தேவர்களின் கடனையும், ஸந்தான ஸமுத்பாதநத்தினால் பித்ருக்களின் கடனையும் தீர்ப்பதென்றும் இதில் கூறப்பட்டுள்ளது. இம் மூவகைக் கடன்களையும் தீர்க்காமல் மோக்ஷத்தில் ருசிவைத்தால் அது கிடைக்காதென்றும் நரகமே பலிக்குமென்றும் மநு ஸ்மிருதியில் சொல்லப்பட்டுள்ளது. "ருணாநி த்ரீண்யபாக்ருத்ய மநோ மோக்ஷேநிவேசயேத், அநபாக்ருத்ய, மோக்ஷம் து ஸேவமாநோ வ்ரஜத்யத:." என்பது மநு மஹர்ஷியின் வசனம். இதன் பொருள் :-- மூன்று

கடன்களையும் தீர்த்துவிட்டு, பிறகு மனத்தை மோக்ஷத்தில் ஊன்றவைக்கவேணும், கடன்களைத் தீர்க்காமல் மோக்ஷத்தை விரும்பினாலோ அதோகதியையே அடைந்திடுவான் -- என்பதாம். வேங்கடத்துறைவார்க்கு நம: என்று சொல்லிவிட்டால் அம்மூன்று கடன்களும் தீர்க்கப்பட்டனவாகவே ஆய்விடும் என்கிறார்.

**மெய்மேல் வினைமுற்றவும்** என்றவிடத்திலும் வேம் என்கிற வினைமுற்று அந்வயிக்கும். சரீர ஸம்பந்தமடியாக நேருகின்ற பாவங்களத்தனையும் தொலைந்துபோம் என்றபடி. **மெய் -- சரீரம்.** இனி, மெய் என்பதைத் தனியே பிரித்து, மேல்வினை முற்றவும் வேம், (இது) மெய் - ஸத்யம் என்றுரைத்தலுமாம். கடங்கள் என்பதனால் வேதத்திற் கூறப்பட்ட மூவகைக் கடன்களைக் கொள்ளாமல் பாவங்கள் என்றே பொருள்கொள்ளுதலும் நன்று. பாவங்களானவை பூர்வாங்கங்கள் என்றும் உத்தராங்கங்கள் என்றும் இருவகைப்படும். எம்பெருமானைப் பற்றுதற்கு முன்பு புத்திபூர்வமாகப் பண்ணும் பாவங்கள் **பூர்வாங்கங்களாம்.** பிறகு ப்ரக்ருதி பாரவச்யத்தாலே ப்ராமாதிகமாக நேரும் பாவங்கள் **உத்தராங்கங்களாம்.** இங்கு, **கடங்கள்** என்றது பூர்வாங்கங்களைச் சொல்லும். மேல்வினை என்று உத்தராங்கங்களை ஸ்பஷ்டமாகவே சொல்லும். இவையிரண்டும் வேம் என்கிறவிதனால், சாரீரக மீமாம்ஸையில் நான்காமத்யாயத்தில் முதல் பாதத்தில் "தததிகம உத்தரபூர்வா கயோரச்லேஷ விநாசௌ தத்வ்யபதே சாது" என்கிற ஸூத்திரத்தின் பொருள் பேசப்பட்டதாகும்.

**மெய்** = "வேதநூல் ஓதுகின்றதுண்மையல்லதில்லை மற்றுரைக்கிலே" என்கிறார் திருமழிசைப் பிரான். வேதம் சொல்லுவதடங்கலும் ஸத்யமாயிருக்கு மத்தனையல்லது அல்பமும் பொய் கலசாது. சாந்தோக்ய உபநிஷத்தில் வைச்வாநரவித்யையில் "தத்யதேஷீகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதுர்யேத ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூர்யந்தே." என்று சொல்லியிருப்பது பழுதுபடாதென்றவாறு.

எத்தனையோ ஜன்மங்களில் ஸஞ்சிதங்களாய் மலைமலையாகக் குவிந்துகிடக்கும் பாவங்கள் நம்முடைய ஸ்வல்ப ஆநுகூல்யத்தில் தொலைந்திடுமோ என்று சிலர் சங்கித்தார்களாம். அவர்களுக்கு, பட்டர் ரஸோக்தியுடன், ஒரு இதிஹாஸ மெடுத்துரைத்தாராம் : இராமபிரான் கடலரசனை நோக்கி மூன்றுநாள் தரைகிடந்து தைந்யம் காட்டிநின்றார். அவ்வளவில் கடலரசன் முகங்காட்டாதொழியவே சீறிச் சிவந்து அக் கடல்மீது அம்பு தொடுத்துநின்றார். அதுகண்டு கடலரசன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து விநயம்தோற்ற நின்றவாறே 'உனக்காக அம்பு தொடுத்தேன்' என்றுரைக்க வெட்கப்பட்டு, 'உன் விரோதிகளைச் சொல்லு, அவர்கள்மீது இவ்வம்பைச் செலுத்துகிறேன்' என்று சொல்லி, அப்படியே அவன் தனது விரோதிகளிருக்குமிடம் குறிப்பிட அங்கே அவ்வம்பைச் செலுத்தி உபகாரஞ் செய்தாரென்று ஸ்ரீராமாயணத்திற் காண்கிறோம்.

(பட்டர் இவ்விடத்தை உபந்யாஸஞ் செய்கிறபோது த்ருஷ்டாந்தமாகச் சொன்ன ஒரு சிறு கதையுண்டு :- அதாவது, தலையில் மயிரின்றி இருப்பானொருவன் நெற்களத்திற்கு ப்ரபுவாய் அங்கு இருந்தபோது, சதுரனான ஒரு யாசகன் அங்கேவந்து அவனை நோக்கி 'நீர் குழலைப் பேணாமல் இங்ஙனே காரியஞ்செய்கிறீரே, இப்படியுஞ் செய்யலாமோ? குழற்கற்றையும் தும்பும் தூசுமாக ஆய்விடுகிறதே!' என்று அநுதாபிப்பான்போலப் புகழந்து பேசினான். அது கேட்டு உவந்து அவன் 'எதற்காகவந்தீர்!' என்று வந்தவனை வினவ, அவனும் 'விசேஷமொன்றுமில்லை மஹாப்ரபுவைக் கண்டுபோகவந்தேன்' என்ன, 'ஆனால் ஒரு நெற்கோட்டையைக் கொடுப்போம்' என்று எடுத்துக்கொடுத்தனுப்பினான். அவன் அதனைக் கொண்டுபோம்போது எதிரே ஒருவன் வந்து 'இது எங்கே பெற்றது?' என்று

வினாவ, அதற்கு அவன் 'அதோ அந்த நெற்களத்தில் மொட்டைத் தலையனாயிருக்கிறானே அவன் தந்தான்' என்று விடைகூறினான். அதுகேட்ட வழிப்போக்கன் உடனே களத்தண்டை வந்து ப்ரபுவை நோக்கி 'இன்னான் உம்மை வைது போகின்றனனே' என்று கோள் சொன்னான். அதுகேட்டலும் அவன் 'அடா! என் நெல்லையுங்கொண்டு என்னையும் வைது போகிறாயா?' என்று சினந்து, முன்புதந்த நெற்கோட்டையைப் பறித்துக்கொள்ளக் கருதி அவனைத் தொடர்ந்தோடினன். அவன் அவ்வாறு ஓடிவருவதைத் திரும்பிப்பார்த்த இந்த சதுரயாசகன் அவன் அருகில் வந்தவளவிலே 'ஐயோ, குழல்கள் அலைய அலைய ஓடிவருகின்றீரே'! என்று மீண்டும் புகழ்ந்தான். அதுகேட்டலும், அந்த நெல்லுடையான் மிகவும் மகிழ்ச்சிகொண்டு 'ஒன்றுமில்லை, இன்னம் ஒரு நெற்கோட்டை கொண்டுபோகச் சொல்ல வந்தேன்' என்று சொல்லி அவனைத் திருப்பியழைத்துக் கொண்டுபோய் மீண்டும் ஒரு நெற்கோட்டை கொடுத்தனுப்பினான் என்பதாம். இதனால், உலகிற் பேதையர்களான மனிதர்கள் தங்கட்குச் சிறிதும் பொருந்தாத விஷயங்களைப் பிறர் தங்கள் மேலேறிட்டுச் சொல்லித் துதித்தாலும் அவை தமக்குத் தகுதியல்லன என்றெண்ணி நாணங்கொள்ளாமல் அத்துதிமொழியை மிக்க மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு மனமுவந்து, அவ்வாறு துதித்தவர்க்கு மிகுதியாகப் பொருள் வழங்குவர் என்பது தெரிவிக்கப்பட்டது. எம்பெருமானுக்கு ஸ்தவ்யன் என்றும், ஸ்தவப்ரியன் என்றும் (ஸஹஸ்ரநாமத்தில்) இரண்டு திருநாமங்களுள. ஸ்தவ்ய: =ஸ்தோத்ரஞ் செய்ய உரியவர். எந்தக் குணங்களையிட்டு எப்படிப் புகழ்ந்தாலும் அவை பொய்யாகாமல் பொருத்தமாகவே யிருக்கப் பெற்றவர் என்றபடி. ஸ்தவப்ரிய: = யாராலும் எந்தப் பாஷையாலும் எவ்வகையாலும் செய்யப்படும் ஸ்தோத்திரங்களைச் சொற்பிழை பொருட்பிழை இருந்தாலும் குணங்களைச் சொல்வதாக எண்ணி அன்புடன் அங்கீகரிப்பவர் என்றபடி. (இது பட்டர் பாஷ்யத்திலுள்ள அர்த்த விவரணம்.) ஆகவே, அற்ப மனிதர்களிடத்திற்போல எம்பெருமானிடத்தில் நாம் ஏலாதவற்றை இட்டுப் புகழவேண்டியதில்லை. நம்முடைய வாக்கில் ஸ்வல்பம் புகழுரை வந்த மாத்திரத்திலே எம்பெருமான் பரமத்ருப்தியடைந்து நம் அபராதங்களையெல்லாம் பொறுத்தருளிப் பல நன்மைகளைச் செய்தருளக்கூடும் என்பதில் ஸந்தேகமில்லை. ஆனதால், "வேங்கடங்கள், மேல் வினை முற்றவும் -- (இது) மெய்" என்றருளியது மிகப் பொருந்துமென்க.

பாவங்கள் தொலைவதற்காகச் செய்யவேண்டிய காரியம் கனத்திருக்குமோவென்ன, அப்படியொன்றுமில்லை என்கிறார் **தங்கட்கு** என்று தொடங்கி. தாங்கள் தங்களுக்கு நன்றான கைங்கரியத்தைப் பண்ண வமையும்; விரோதிதன்னடையே விலகும் என்பது கருத்து. அவரவர்கள் தத்தம் மனதிற்குத் தோன்றியபடியே செய்ய வமையும் என்று இவ்விதமாக இரண்டாமடிக்குப் பொருள் கொள்ளலாகாது. வழுவிலாவடிமை செய்யவேண்டும்நாம்' என்கிற அதிகாரியைக் குறித்துச் சொல்லுகையாலே. **தாங்கள்** -- விஷயாந்தரங்களில் விரக்தராய்க் கைங்கரிய ருசியுடையராயிருக்குமவர்கள். **தங்கட்கு** -- இப்படிப்பட்ட ருசியுடையராயிருக்கிற தங்களுக்கு. **நல்லனவே செய்வார்** -- தங்கள் ஸ்வரூபத்தோடு சேர்ந்த கைங்கரியத்தையே பண்ணுவார். **செய்வார்** என்கிறவிதனை வினைமுற்றாகக் கொள்ளாமல் வினையாலனையும் பெயராகக் கொண்டு 'தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்பவர்களாயும், வேங்கடத்துறைவாற்கு நம வென்னலாங்கடமையது சுமந்தவர்களாயுமிருக்கின்ற ஸத்துக்களுக்கு கடன்களும் மேல்வினை முற்றவும் வேம்' என்றும் அந்வயிக்கலாம். **செய்வார்** என்பதை வினைமுற்றாகவே கொண்டால், இப்பாசுரத்தை இரண்டு வாக்கியார்த்தமாகக் கொள்ளவேணும். **வேங்கடத்துறைவார்க்கு** என்று தொடங்கி, பின்னடிகளையும் முதலடிகளையும் அந்வயித்து ஒரு வாக்யார்த்தமாக முடித்திட்டு, 'தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வார்' என்பதை இரண்டாவது வாக்யார்த்தமாக அந்வயிப்பது.

"நமோ வென்னல்" என்கிறபாடம் பெரியோர் வழங்குமதன்று. 'நமவென்னல்' என்றே கொள்க. "இராமாநுசாய நமவென்று" என்ற ஆர்த்திப் பிரபந்த ஸ்ரீஸூக்தியும் காணத் தக்கது. **என்னலாங்கடைமையது** =என்கிற ஸுலபமான உபாயத்தை என்றபடி. **சுமந்தார்கட்கு** என்றது எம்பெருமானுடைய அபிப்ராயத்தாலாம். பக்தர்களின் வாக்கில் நம: என்கிற ஒரு சிறிய சொல் வந்தாலும் இதை மலையாக நினைப்பனாம் எம்பெருமான். ஆனதுபற்றியே பட்டரும் ஸ்ரீகுணரத்ந கோசத்தில் "கஸ்மைசிதஞ்ஜலிபரம் வஹதே" என்றார். இங்கு பரம் வஹதே என்றது குறித்துக்கொள்ளத் தக்கது. இங்கு "பூயிஷ்டாந்தே நமஉக்திம் விதேம" என்கிற வேத வாக்கியத்தைப் பெரியவாச்சான்பிள்ளையும் வடக்குத்திருவீதிப்பிள்ளையும் எடுத்துக் காட்டினர். "நம உக்திம் தேபூயிஷ்டாம் விதேம" என்கிற அந்வயத்தில் நோக்கு. நம: என்கிற சொல்மாத்திரத்தை (அக்நிசரீரக பகவானாகிய) உனக்கு மிகவும் கனத்ததாகச் செய்யகடவோம் என்று பொருள். இப்படி அந்வயிப்பது பிசகு என்றும், "பூயிஷ்டமான நம உக்தியை" என்நே அந்வயிக்க வேணுமென்றும் இதர ஸம்ப்ரதாயஸ்தர்கள் சொல்லுவார்கள். அவர்களுடைய ஸம்ப்ரதாயத்திற்குத் தலைவரான ஸாக்ஷாத் ஸ்வாமி இயற்றிய வியாக்யானத்திலும் (இப்பாசுரத்தினுரையில்) "பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம என்கிறபடியே ஈச்வரபுத்தியாலே இத்தைச் சுமையாகச் சொல்லுகிறார்" என்றெழுதியிருப்பது நோக்கத்தக்கது.

சுமந்துமாமலர் நீர்சுடர்தூபங்கொண்டு *<br>
அமர்ந்துவானவர் வானவர்கோனொடும் *<br>
நமன்றெழும் திருவேங்கடம் நங்கட்கு *<br>
சமன்கொள்வீடுதரும் தடங்குன்றமே.

| | |
|---|---|
| மா | - சிறந்த |
| மலர் | - புஷ்பங்களையும் |
| நீர் | - தீர்த்தத்தையும் |
| சுடர் | - தீபத்தையும் |
| தூபம் | - தூபத்தையும் |
| சுமந்து கொண்டு | - ஏந்திக்கொண்டு |
| வானவர் | - தேவர்கள் |
| வானவர் கோனொடும் | - தங்கள் தலைவனோடும் கூட |
| அமர்ந்து நமன்று | - அநந்யப்ரயோஜனராய் வணங்கி |
| எழும் | - உஜ்ஜீவிக்குமிடமான |
| திருவேங்கடம் | - திருவேங்கடமென்கிற |
| தடம் குன்றமே | - பெரிய திருமலையே |
| நங்கட்கு | - நமக்கு |
| சமன் கொள் வீடு | - பரமஸாம்யாபத்தி ரூபமான மோக்ஷத்தை |
| தரும் | - அளிக்கும் |

* (**சுமந்து மாமலர்**) நமக்கு அபேக்ஷிதமான அடிமைகளெல்லாம் பெறுதற்குத் திருவேங்கடமுடையானை ஆச்ரயிக்க வேண்டுவதில்லை, திருமலையின் ஆச்ரயணமே போதுமென்கிறார். வானவர் வானவர்கோனொடும் மாமலர் நீர்சுடர் தூபம் சுமந்து கொண்டு நமன்று எழும் திருவேங்கடம் தடம் குன்றம் நங்கட்குச் சமன்கொள் வீடுதரும் -- என்று அந்வயக்ரமம். மா என்பது மலர்க்கு மாத்திரம் விசேஷணமன்று, நீர்சுடர் தூபங்கட்கும்

விசேஷணம். புஷ்பம் தீர்த்தம் தீபம் தூபம் ஆகிய இவை மிகச்சிறந்த வஸ்துக்களாகத் தேடி ஸம்பாதிக்கப்படவேண்டும் என்கிறதன்று. பக்தியின் கனத்தாலேயாகுஞ் சிறப்பு விவக்ஷிதம். சுமந்து என்றதும் அதுபற்றியே என்க. இவ்விடத்தில் ஒரு இதிஹாஸம் அருளிச் செய்கிறார். அதாவது -- ஸ்ரீஜகந்நாதத்திலே எம்பெருமான் செண்பகப்பூவை உகந்துசாத்திக் கொள்வது வழக்கமாயிருந்ததனால் சில ராஜகுமாரர்கள் எம்பெருமானுக்குச் செண்பகப்பூ ஸம்பாதித்து ஸமர்பிக்கவேணுமென்று கடைவீதியேறச் சென்றனர். அங்குப் பூவெல்லாம் விற்றுப்போய் ஒர ஒரு பூமாத்திரம் மிகுந்திருந்தது. விலை கொடுத்து வாங்கவந்த ராஜகுமாரர்கள் செல்வச் செருக்குடையவர்கள் ஆதலால் ஒவ்வொருவரும் இப்பூவை நாமே பெற்றுப்போய் ஸமர்ப்பிக்கவேணுமென்கிற ஆவல்கொண்டவராகி மேன்மேலும் விலையை ஏற்றிக் கொண்டே வந்தார்கள். கடைசியாக அளவற்ற விலைகொடுத்து ஒரு ராஜபுத்திரன் அதைவாங்கிப் பெருமாளுக்குச் சாத்த அன்றிரா அவனுடைய கனவிலே எம்பெருமான் காட்சி தந்து 'நீ இட்ட பூ எனக்குக் கனத்துச் சுமக்கவொண்ணாததாயிருக்கிறது' என்றருளிச் செய்தான் என்பதாம். இதனால், எம்பெருமானுக்கு அன்புடன் எதையிட்டாலும் அது அவனுக்கு அலப்ய லாபமாயிருக்கும் என்பது போதரும்.

**வானவர் வானவர் கோனொடும்** = நித்யஸூரிகளையும், ஸ்ரீஸேநாதிபதியாழ்வானையும் சொல்லிற்றாகவுமாம். தேவர்களையும் நாமுகனையும் சொல்லிற்றாகவுமாம். அமர்ந்து என்றது அநந்யப்ரயோஜநத்வத்தின் அமைதியைச் சொனனபடி. தேவதைகளுக்கு ப்ரயோஜநாந்தர பரத்வம் ப்ரஸித்தமாயிற்றே. அவர்களுக்கு அநந்யப்ரயோஜநத்வம் பொருந்துமோ என்கிற சங்கையை நம்பிள்ளை தாமே பரிஹரிக்கிறார். -- "ப்ரஹ்மாதிகளைச் சொல்லிற்றானபோது, அவர்கள் ப்ரயோஜநாந்தரபரரே யாகிலும் அவர்களையும் அநந்ய ப்ரயோஜநராயிருக்குமாயிற்று இது தன்னின் ஸ்வபாவம்" என்று. நமன்று -- நம: என்று சொல்லி என்றபடி. "* துயரறுசுடரடி தொழுதெழு என்கிற தம்வாஸநை அவர்களுக்கு முண்டென்கிறார்" என்பது ஈடு.

**சமன்கொள்வீடு** என்பதற்கு இரண்டுவகையாக நிர்வாஹமுண்டு. "நிரஞ்ஜந: பரமம்ஸாம்யமுபைதி" என்று உபநிஷத்திற் சொல்லுகிறபடியே எம்பெருமானோடு ஸாம்யாபத்திரூபமான மோக்ஷமென்பது ஒரு நிர்வாஹம். ஸ்வஸ்வரூபத்திற்கு ஸமமாக (அநுரூபமாக) இருப்பதைக் கொண்டிருக்கிற மோக்ஷம் -- கைங்கரியரூபமான மோக்ஷம் -- என்பது மற்றொரு நிர்வாஹம். **சமன்** -- சமம். மகரனகரப்போலி. சமமென்றது ஸமமென்றபடியாய் ஸாம்யமென்றதாகும். திருமலை எம்பெருமானுக்கு எப்படி சேக்ஷப்பட்டிருக்கிறதோ அப்படியே நாமும் சேஷப்பட்டிருக்கும் படியாகச் செய்து கொடுக்கும் என்பதும் ஒரு நிர்வாஹம். ஸ்வசேஷத்வ ஸமாந சேஷத்வத்தைத் தருமென்றதாயிற்று.

குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன் *
அன்றுஞாலம் அளந்தபிரான் * பரன்
சென்றுசேர் திருவேங்கடமாமலை *
ஒன்றுமேதொழ நம்வினையோயுமே.

| | |
|---|---|
| குன்றம் ஏந்தி | - (கோவர்த்தன) மலையைக் குடையாகத் தாங்கிநின்று |
| குளிர் மழை | - குளிர்ந்த பெருமழையை |
| காத்தவன் | - தடுத்தவனும் |
| அன்று | - முன்பொரு காலத்தில் |
| ஞாலம் அளந்த பிரான் | - உலகங்களை யளந்த பிரபுவுமாகிய |
| பரன் | - எம்பெருமான் |

சென்று சேர் - வந்து சேர்ந்தவிடமான
திருவேங்கடம் - திருமலை
மா மலை ஒன்றுமே - ஒன்றை மாத்திரமே
தொழ - தொழப்பெறில்
நம் வினை - நமது வினைகள் யாவும்
ஓயும் - தொலைந்திடும்.

∗ (**குன்றமேந்தி**) எம்பெருமானுக்கும் பரமப்ராப்பயமான திருமலைதான் நமக்கும் பரமப்ராப்யம். அது நமக்கு ஒரு பலனையளிக்க வேணுமென்பதில்லை. ஒரு பலனையும் தாராதொழியினும் அதுவே நமக்கு ப்ராப்யமாகக் கடவது -- என்கிறார்.

**குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன்** = திருவாய்பாடியிலுள்ள இடையர்களெல்லாரும் கண்ணபிரானுடைய அற்புத சரிதைகளைக் கண்டு 'இவனே நம் குலக்கொழுந்து, இவன் சொற்படி நடப்பதே நமது கடமை' என்று நிச்சயித்திருந்தார்கள். இருக்கையில் சரத்காலம் வந்தது. அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவதுபோல் இந்திரனுக்குப் பூசைசெய்யப் பலபல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்க்றிகளும் மற்றுமுள்ள பூஜைப் பொருள்களையும் அமைப்பதைக்கண்டு கண்ணபிரான் 'ஓ பெரியோர்களே! இவை எதுக்காக?' என்றான். அதற்கு அவர்கள் 'அப்பா! தேவேந்திரனுடைய அநுக்ரஹத்தினால் காலங்களில் தகுதியாக மழைபெய்து அதனால் பசுக்களும் நாமும் சுகமே வாழ்கின்றோம். இனி எப்போதும் அந்த இந்திரன் நம்மை இப்படியே ரக்ஷிக்கவேணு மென்கைக்காக அவனுக்கு வருஷத்திற் கொருமுறை பொங்கலிடுவதுண்டு. அதற்காக இவையெல்லாம் சேர்த்து வைத்தோம்.' என்றனர். கண்ணன் அதுகேட்டு 'நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கின்றோமோ அதற்கன்றோ பூஜைசெய்யவேணும். இக் கோவர்த்தன மலையன்றோ பசுக்களுக்குப் புல்லுந் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது. இந்திரனால் நமக்கு என்ன பிரயோஜனமுண்டு? இதையெல்லாம் நீங்கள் இந்த மலைக்கே பலியிடுங்கள்' என்ன; இடையர்கள் அப்படியே செய்யத் துணிந்து மலைக்கே பலியிட்டவளவில், கண்ணபிரான் தான் அம்மலையில் ஆவேசித்து அவற்றையெல்லாம் தானே அமுதுசெய்திட்டான். பின்பு பூஜையிழந்த இந்திரன் சீற்றமுற்றுத் தன் பரிஜனங்களான மேகங்களை அழைத்து 'இடைக் குலத்துக்குப் பெருந்தீங்கு விளையும்படி விடாமழை பெய்யுங்கள்' என்று சொல்லிக் கட்டளையிடவே அம் மேகங்கள் அப்படியே வந்து ஏழுநாள் விடாமழை பெய்ய இடையரும் பசுக்களுமெல்லாம் கதறிக் கண்ணனையே சரணமடைய, கண்ணபிரான் அபயமளித்து மலையைப் பிடுங்கிக் குடையாகத் தூக்கித் தாங்கிக் கோகுலத்தைச் சேர்ந்த ஸகல பிராணிகளையும் அதன்கீழ் அழைத்துக் கொண்டு சிறிதும் அபாயமின்றிக் காப்பாற்றியருளினன் என்ற வரலாறு இங்கு உணரத்தக்கது. (ஏழுநாள் இடைவிடாது கல்மாரி பெய்தும் யாருக்கும் எவ்விதபாதையும் நேரிடாமையைக் கண்ட இந்திரன் பராத்பரனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமைக்கு வியந்து கீழிறங்கிவந்து பணிந்து அபராத க்ஷாமணம் பண்ணிக்கொண்டு கோவிந்தாவிஷேகமும் நடத்திவிட்டுப் போய்ச் சேர்ந்தானென்பதும் உணர்க.)

விபவாவதாரத்தோடு அர்ச்சாவதாரத்தோடு வாசியற எஞ்ஞான்றும் மலையே ரக்ஷகமென்று சாடூக்தியாக இங்கு அருளிச்செய்வர்கள்.

**அன்று ஞாலமளந்தபிரான்** -- ஒரு ஊர்க்கு உதவினமை கீழே சொல்லிற்று. உலகுக் கெல்லாம் உதவினமை இதனால் சொல்லுகிறது. ∗தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக் கொண்ட த்ரிவிக்ரமாவதார சரிதம் ப்ரஸித்தம்.

இப்படிப்பட்ட பரன் சென்று சேர் திருவேங்கடமாமலை யொன்றுமே தொழ நம் வினை ஓயும். உள்ளே எழுந்தருளியிருக்கிறவன் தானும் வேண்டா, திருமலையாழ்வாரே போதும் என்கை.

ஓயும்மூப்புப் பிறப்பிறப்புப்பிணி *
வீயுமாறுசெய்வான் திருவேங்கடத்
தாயன் *நாள்மலராம் அடித்தாமரை *
வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கே.

| | |
|---|---|
| திரு வேங்கடத்து ஆயன் | - திருமலையில் வாழ்கிற ஸ்ரீகிருஷ்ணன் |
| தாமரை நாள் மலர் ஆம் | - அப்போதலர்ந்த செந்தாமரைப் பூப்போன்ற |
| அடி | - திருவடிகளை |
| வாய் உள்ளும் | - வாக்கினுள்ளும் |
| மனத்துள்ளும் | - நெஞ்சினுள்ளும் |
| வைப்பார்கட்கு | - வைத்துக்கொள்பவர்களுக்கு |
| ஓயும் மூப்பு | - ஓய்வை விளைக்கின்ற கிழத்தனமென்ன |
| பிறப்பு | - பிறவியென்ன |
| இறப்பு | - மரணமென்ன |
| பிணி | - வ்யாதியென்ன (ஆகிய இவை) |
| வீயும் ஆறு | - தொலையும் வகை |
| செய்வான் | - செய்தருள்வன். |

* (**ஓயு மூப்பு**) திருமலையென்றே நம் வினை ஓய்வதற்குப் போதுமென்றார் கீழ். அந்தத் திருமலைதானும் பூர்த்தியாக வேணுமென்பதில்லை, அதில் ஏகதேசமேபோதும் என்கிறார் இப்பாட்டில். (இங்கு ஏகதேச மென்கிற வார்த்தையினால் நினைக்கிறது திருமலைப் பயனை. திருமலையில் ஸம்பந்தத்தைப் பற்றியாயிற்று ஸ்ரீநிவாஸனும் உத்தேச்யனாவது. திருமங்கையாழ்வார் "வடமாமலையுச்சியை" என்று ஸ்ரீநிவாஸனைத் திருமலையின் ஏகதேசமாகவே கூறினர்.)

பிணி வீயுமாறு செய்வான் திருவேங்கடத்தாயன் நாண்மலராம் அடித்தாமரை வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கு மூப்புப் பிறப்பு இறப்பு ஓயும் என்றும் அந்வயிப்பது. வியாதி முதலிய கருமபலன்களைத் தொலைத்தருள்வதற்காகத் திருமலையிலே எழுந்தருளி நிற்கிற பெருமாளுடைய, 'நாட் பூமலர்ந்தது' என்னலாம்படி ஸுகுமாரமான திருவடித் தாமரைகளை நெஞ்சினால் நினைத்து வாயினால் துதிக்கு மவர்களுக்கு ஜன்ம ஜராமரணாதிகள் ஓயும் என்கை.

ஓயும் என்பதை வினைமுற்றாகக் கொள்ளாமல் 'ஓயும் மூப்பு -- ஓய்வை விளைவிக்கின்ற மூப்பு' என்று மூப்புக்கு அடைமொழியாக்கி உரைப்பர் பன்னீராயிரப்படி உரைக்காரர். திருவேங்கடத் தாயனானவன் (தனது) நாண்மலரடித் தாமரையை வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கு, ஓயுமூப்புப் பிறப்பிறப்புப் பிணிகளை வீயுமாறு செய்வான் -- என்கிற அந்வயக்ரமம் இவர்க்கு விவக்ஷிதம்.

இப்பாசுரத்தின் ஆறாயிரப்படி :- "திருவேங்கடமுடையானன்றோ ப்ராப்யம், திருமலையே ப்ராப்யமென்று சொல்லுவானென்னென்னில், திருவேங்கடமுடையானுடைய ப்ராப்யத்வமும் திருமலையோடுள்ள ஸம்பந்தத்தாலே வந்ததாதலால் திருமலையே ப்ராப்யமென்கிறார்" என்பதாம். நம் ஆசிரியர்கள் பாசுரங்களில் மிகவும் ஆழ்ந்து பொருள் கண்டுபிடிக்கும் சதிர்

வாசாகோசரம்.

> வைத்தநாள்வரை எல்லைகுறுகிச்சென்று *
> எய்திளைப்பதன் முன்னம் அடைமினோ *
> பைத்தபாம்பணையான் திருவேங்கடம் *
> மொய்த்த சோலை மொய்பூந்தடந்தாழ்வரே.

(பாகவதர்களே!)

| | |
|---|---|
| வைத்த | - (உங்களுக்குச்) சங்கற்பித்து வைத்த |
| நாள் | - ஆயுட்காலத்தினுடைய |
| வரை | - அளவான |
| எல்லை | - எல்லையானது |
| குறுகி | - அணுகி |
| எய்த்து இளைப்பதன் | - (அதனால் நீங்கள்) மிகவும் தளர்ச்சியடைவதற்கு |
| முன்னம் | - முன்னே, |
| சென்று | - (திருமலையை நோக்கிச் சென்று) |
| பைத்த பாம்பு அணையான் | - படமெடுத்த ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்ட பெருமானது |
| திருவேங்கடம் | - (அத்) திருமலையில் |
| மொய்த்த சோலை | - நெருங்கின சோலைகளும் |
| மொய் பூ தடம் | - நெருங்கின புஷ்கரிணிகளுமுள்ள |
| தாழ்வர் | - திருத்தாழ்வரையை |
| அடைமின் | - அடையுங்கள். |

* (**வைத்தநாள்வரை**) பரம போக்யமான திருமலையையே பரம ப்ராப்யமாகப் பெறுங்களென்று பிறர்க்கு உபதேசிக்கிறார். எம்பெருமான் சேதநர்களுக்குக் கரணகளேபரங்களைக் கொடுத்து ஆயுளையும் அருளுகிறான். இவை எதற்காகவென்னில், திருமலை முதலான திருப்பதிகளிலே சென்று வழிபாடு செய்வதற்காகவேயன்றி வேறொரு காரியத்திற்காகவன்று. ஆயினும், உலகர் உடலில் வலிவுள்ள காலங்களில் விஷயாந்தரங்களிலே மண்டிக்கிடந்து, திவ்யதேச வழிபாடுகளைப்பற்றிப் போகப்போகப் பார்த்துக்கொள்வோம் என்று பதற்றமற்று ஆறியிருந்துவிடுகிறார்கள். பார்த்துக் கொண்டிருக்கும்போதே பல வகைகளிலும் தளர்ச்சிவந்து சேர்கின்றது. அப்போது திவ்யதேச வழிபாட்டை நெஞ்சிலும் நினைக்க ப்ரஸக்தியில்லையாகிறது. அங்ஙனம் ஆகாமே திருமலையைப் பணிமின் என்றாராயிற்று.

எம்பெருமானுக்குப் பரமபோக்யமான சயனமாகத் திருவனந்தாழ்வான் இருக்கவும் அவனையும்விட்டுத் திருமலையில் வாஸம் மிகவும் ருசித்தது என்பதை மூன்றாமடி காட்டும். கீழ் முதற்பாட்டில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட கைங்கர்யத்தைச் செய்யுமவர்கள் ஆயாஸமின்றிக்கே மிகவும் இனிதாச் செய்வதற்குப் பாங்கானவிடம் திருமலை என்பதைக்காட்டும் ஈற்றடி.

> தாள்பரப்பி மண்தாவியவீசனை *
> நீள்பொழில் குருகூர்ச்சடகோபன் சொல்*
> கேழிலாயிரத்து இப்பத்தும்வல்லவர் *

வாழ்வர்வாழ்வெய்தி ஞாலம்புகழவே.

| | |
|---|---|
| தாள் பரப்பி | - திருவடியைவிரித்து |
| மண் தாவிய | - பூமியெல்லாம் அளந்து கொண்ட |
| ஈசனை | - எம்பெருமானைக் குறித்து |
| நீள் பொழில் | - உயர்ந்த சோலைகளையுடைய |
| குருகூர் | - திருக்குருகூரில் (அவதரித்த) |
| சடகோபன் | - ஆழ்வார் |
| சொல் | - அருளிச்செய்த |
| கேழ் இல் | - ஒப்பற்றதான |
| ஆயிரத்து | - ஆயிரத்தில் |
| இப் பத்தும் | - இத்திருவாய்மொழியை |
| வல்லவர் | - ஓத வல்லவர்கள் |
| ஞாலம் புகழ | - உலகம் யாவும் கொண்டாடும்படி |
| வாழ்வு எய்தி | - வாழ்ச்சி பெற்று |

(அந்த வாழ்ச்சி ஒருநாளும் குன்றாமே)

| | |
|---|---|
| வாழ்வர் | - விளங்குவர். |

* (**தாள்பரப்பி**) இத் திருவாய்மொழியை ஓதவல்லவர்கள் உலகமெல்லாங் கொண்டாடும்படியான வாழ்ச்சியைப் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகின்றார்.

இப்பதிகம் திருவேங்கடமுடையானைக் கவிபாடினதாயிருக்க "தாள்பரப்பி மண்தாவியவீசனை" என்றது என்னென்னில்; எல்லாரையும் திருவடிகளின் கீழேயிட்டுக் கொள்ளுகைக்காக நிற்கிற நிலையாலும், *கானமும் வானரமுமானவற்றுக்கும் முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிறபடியாலும் திருவேங்கடமுடையானை உலகளந்த பெருமானாகச் சொல்லப் பொருத்தமுண்டென்பர் ஆசிரியர்கள்.

(**வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம்புகழவே**) 'ஞாலம் புகழ வாழ்வர்' என்றாவது, 'ஞாலம் புகழ வாழ்வெய்துவர்' என்றாவது அருளிச்செய்தால் போதுமே; 'வாழ்வெய்தி வாழ்வர்' என்றவிது புநருக்தியாகவுள்ளதேயென்று சிலர் சங்கிக்கக்கூடும். பெறுகிற வாழ்வு இவ்வாத்மாவுள்ளதனையுமாகும் என்று காட்டுகிறதாகையாலே புநருக்தியில்லை. கைங்கர்ய ஸாம்ராஜ்யமாகிற வாழ்வைப் பெற்று எந்நாளும் அந்த வாழ்வுடனே யிருக்கப் பெறுவர்கள் என்றவாறு. "ஞாலம் வாழ்வெய்திப் புகழ வாழ்வர்" என்று அந்வயித்துப் பொருள் கொள்வதுமுண்டு. அப்போது சங்கைக்கு உதயமேயில்லை.

## திருவாய்மொழி நூற்றந்தாதி

ஒழிவிலாக் கால முடனாக்கி மன்னி
வழுவிலா வாட்செய்ய மாலுக்கு -- எழுசிகர
வேங்கடத்துப் பாரித்த மிக்க நலஞ் சேர்மாறன்
பூங்கழலை நெஞ்சே புகழ்.

| | |
|---|---|
| ஒழிவு இலா காலம் | - ஸதா காலமும் |
| உடன் ஆகி மன்னி | - கூடவே பிரியாது பொருந்தியிருந்து |
| மாலுக்கு | - ஸர்வேச்வரனுக்கு |
| வழு இலா | - வழுவின்றிக்கே |

| | |
|---|---|
| ஆள் செய்ய | - அடிமை செய்யுமாறு |
| எழு சிகரம் | - ஓங்கின சிகரங்களையுடைய |
| வேங்கடத்து பாரித்த | - திருமலையிலே மனோரதித்த |
| மிக்க நலம்சேர் மாறன் | - மஹாகுணசாலியான ஆழ்வாருடைய |
| பூ கழலை | - பொலிவுற்ற திருவடிகளை |
| நெஞ்சே | - மனமே! |
| புகழ் | - போற்றுவாயாக. |

* ஒழிவில்காலமெல்லா மென்கிற திருவாய்மொழியில் திருமலையப்பனுக்கு அநவரதம் அத்தாணிச் சேவகம் செய்யவேணுமென்று மிக்க மனோரதம் கொண்ட சிறந்த நற்குணங்கள் நிரம்பிய ஆழ்வாரது திருவடித் தாமரைகளைத் துதிக்குமாறு நெஞ்சுக்கு உரைத்தாராயிற்று.

---------------------

## பத்தாந்திருவாய்மொழி -- ஒன்றுந்தேவுமுலகும்.

உரையவதாரிகை :- கீழ்த் திருவாய்மொழியிலே ஆழ்வார் தமக்கு ஸம்ஸாரிகளிடையே ஸஹவாஸம் பொறுக்கமுடியாமல் பலவாறாகக் கதற, ஒருவிதமாக அவருடைய ஆர்த்தியை மாற்றவேணுமென்று திருவுள்ளம்பற்றின எம்பெருமான், திருநாட்டிலே திருமகளும் தானுமாக இருக்கிற இருப்பை இங்கே இவர்க்குக் காட்டிக்கொடுத்தருள, இவரும் கண்டு ஒருவாறு களிக்கப்பெற்றார்.

*கண்ணாளா கடல் கடைந்தாய் உனகழற்கே வரும் பரிசு, தண்ணாவா தடியேனைப் பணிகண்டாய் சாமாறே * என்றும் *ஆமாறொன்றறியேன் நான் அரவணையாயம்மானே!, கூமாறே விரைகண்டாய் அடியேனைக் குறிக்கொண்டே * என்றும் கல்லும் கரையும்படி ஆழ்வார் கூப்பிடாநிற்கச் செய்தேயும் எம்பெருமான் இவரை இந்நிலத்திலேயே வைத்திருப்பதற்குப் பல ஹேதுக்கள் உண்டு. ஆழ்வாரைக்கொண்டு உபதேசங்கள் பண்ணுவித்து நாட்டைத் திருத்தவேணுமென்பது ஒரு ஹேதுவாகையாலே, அதனை எம்பெருமான் ஆழ்வார்க்கு ஒருவாறு நினைப்பூட்டினான்போலும் ஆழ்வாரும் எம்பெருமானுடைய நியமனத்தை நிறைவேற்றக் கருதி, பிரகிருதத்தில் எவ்விதமான உபதேசத்தைப் பண்ணலாமென்று பார்த்தார். உலகர் பெரும்பாலும் எம்பெருமானுடைய பரத்வத்தை அறியப்பெறாதவர்களாயும் தேவதாந்தரங்கள் பக்கலிலே வியாமோஹம் கொண்டவர்களாயும் காணப்படுகையாலே இவர்களுக்கு எம்பெருமானுடைய பரத்வத்தையும் இதர தெய்வங்களின் நிஹீநத்வத்தையும் நன்கு உணர்த்தினோமாகில் இவர்கள் திருந்தி ஸம்ஸாரம் அடியறக்கூடும் என்று திருவுள்ளம்பற்றி அங்ஙனே உபேதேசித்தருளுகிறார் இத்திருவாய்மொழியாலே.

கீழே *உயர்வறவுயர்நலம் *திண்ணன்வீடு *முதலான திருவாய்மொழிகளிலும் எம்பெருமானுடைய பரத்வத்தை அருளிச்செய்திருந்தாலும், இத்திருவாய்மொழி அர்ச்சாவதாரத்திலே பரத்வத்தை மூதலிக்கிறதாகையாலே வீறுபெற்றிருக்கும். திருக்குருகூர் என்கிற ஆழ்வார் திருநகரியில் கோயில் கொண்டிருக்கும் எம்பெருமானுக்கு ஆதிநாதப் பெருமாள் என்று திருநாமமாகையாலே, ஸகல ஜகத்காரணபூதன் என்கிற அத்திருநாமத்தை ஸஹித்திருக்கின்ற இப்பெருமான் பக்கலிலே பரத்வத்தை எடுத்துரைக்கப் பாங்காயிருக்குமென்று திருவுள்ளம் பற்றினாராயிற்று.

உலகுக்கெல்லாம் முழுமுதற்காரணமான பொருள் எதுவோ அதுவே பரதெய்வமென்றும்

அதுவே உபாஸிக்கத் தகுந்ததென்றும் உபநிஷத்துக்கள் முறையிடுகின்றன. இனி, எந்ததெய்வம் முழுமுதற்கடவுள் என்று ஆராய்ந்து பார்க்குமிடத்தில், இதை சாஸ்திரங்களைக் கொண்டே அறுதியிடவேணும் அப்படி சாஸ்திரங்களைக் கொண்டு பரிசீலனை செய்வதற்கு முன்னே எம்பெருமானுடைய திருமேனியின் அமைப்பு இருக்கும்படியை நோக்கின மாத்திரத்திலும் இவனே ஸகலஜகத்காரணபூதனென்னுமிடம் எளிதில் அறியக்கூடியதாயிருக்குமென்று இவ்வாழ்வார் தாமே பெரியதிருவந்தாதியில் ஒரு பாசுரத்தாலே வெகு அழகாக அருளிச்செய்தார். அதாவது --(72) "முதலாந் திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர் - முதல்வா, நிகரிலகு காருருவா நின்னகத்தகன்றே, புகரிலகு தாமரையின் பூ" என்பதாம். அரி அயன் அரன் என்கிற மும்மூர்த்திகளும் பரஸ்பரம் ஏற்றத்தாழ்வு இன்றியே ஒத்திருப்பரென்று சிலர் கூறுவர். மேற்கூறிய மும்மூர்த்திகளிற் காட்டில் வேறுபட்ட நான்காவது தத்துவம் ஒன்றுண்டு என்றும், அதுவே இம்மூன்று தத்துவங்கட்கும் நிர்வாஹகமானது என்றும் சிலர் கூறுவார்கள். இங்ஙனே அவரவர்கள் சொல்லுவதெல்லாம் தகுதியற்றது என்பதை எம்பெருமானே உனது திருநாபியில் தோன்றியுள்ள தாமரைப்பூவே அறுதியிட்டுக் காட்டாநின்றது -- என்பது மேலெடுத்துக் காட்டிய பாசுரத்தின் கருத்து. சிவன் பிரமனிடத்துத் தோன்றியவனென்றும் அந்தப் பிரமன் கமலத்துத் தோன்றியவனென்றும், அக்கமலம் திருநாபியிலுள்ளதென்றும், அந்தத் திருநாபி ஸ்ரீமந்நாராயணனுடையதென்றும் அறியப்பெற்றால் அந்த ஸ்ரீமந்நாராயணனே ஸகலஜகத்காரணபூத பரதேவதையாவன் என்னுமிடம் எளிதில் அறியலாம் என்று நிரூபித்துக் காட்டியவாறு.

இனி வேதங்களிலுட்புகுந்து பரிசீலனை செய்தால், ஸகல ஜகத்காரண பூதமான தெய்வம் இன்னதென்பதை அறுதியிடும்வழி எங்ஙனேயென்னில், சாந்தோக்யமென்னும் உபநிஷத்தில் "ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீது" என்கிற வாக்யமானது காரணபூதமான வஸ்துவை ஸத் என்ற சப்தத்தாலே ஓதிற்று. இது ஸமாந்ய சப்தமேயல்லது விசேஷ சப்தமன்று. மற்றொரு உபநிஷத்து "ஆத்மாவா இதமேக ஏவாக்ர ஆஸீது" என்று ஆத்ம சப்தத்தாலே ஓதிற்று. இதுவும் விசேஷ சப்தமன்று. மற்றொரு உபநிஷத்து "ப்ரஹ்மவா இதமேகமேவாக்ர ஆஸீது" என்று ப்ரஹ்ம சப்தத்தாலே ஓதிற்று. இதுவும் விசேஷ சப்தமன்று. கடைசியாக மஹோபநிஷத்திலே "ஏகோஹவை நாராயண ஆஸீது நப்ரஹ்மா நேமாநோ நேம த்யாவாப்ருதிவீ " என்று நாராயண சப்தத்தாலே ஜகத்காரணபூதமான வஸ்து ஓதப்பட்டிருக்கிறது. இந்த நாராயண சப்தமானது ஸத் சப்தம்போலவும் ஆத்மசப்தம் போலவும் ப்ரஹ்ம சப்தம் போலவுமன்றிக்கே விசேஷ சப்தமாகையாலே கீழெடுத்த ஸாமான்ய சப்தங்களெல்லாம் இந்த விசேஷ வ்யக்தியிலே பர்யவஸித்து நின்று நாராயணனே ஸகலஜகத்காரண பூதன் என்று காட்டி அவன்றன்னையே பரதெய்வமாக நிலைநாட்டிநிற்கும். இப்படி வேத வேதாந்தங்களிலே சிரமப்பட்டுப் பரத்வநிஷ்கர்ஷம் பண்ணப்படவேண்டிய பரமபுருஷன் திருக்குருகூரிலே "அர்ச்யஸ் ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபராதீநாகிலாத் மஸ்திதி" என்கிறபடியே எளியனாய்க் காட்சி தந்தருளாநிற்க இவனைப் பணிந்து உஜ்ஜீவித்துப் போகாதே அல்பதெய்வங்களைப் பணிந்து அநர்த்தப்பட்டுப்போகிறீர்களே! என்று தேவதாந்தர பரர்களைத் தட்டியுணர்த்துவது இத்திருவாய்மொழி.

உலகத்தில் பலர் பல சாஸ்திரங்களையும் கற்றுவைத்தும் 'பரதத்துவமின்னது' என்று துணியமாட்டாமல் கண்ட தெய்வங்களின் காலிலும் குனிகின்றார்கள். நம் எம்பெருமானுடைய திருவடி ஸம்பந்தம் பெற்றவர்கள் எத்தனையேனும் கல்வியறிவு இல்லாதவர்களாயிருந்தாலுங் கூட தேவதாந்தரங்களை அடுப்பிடுங்கல்லாக நினைத்திருப்பார்கள். இதற்குக் காரணம் பரமகாருணிகரான நம்மாழ்வார் *ஒன்றுந் தேவு மென்கிற இத்திருவாய் மொழியை

அருளிச்செய்து வைத்ததேயாம் -- என்று எம்பார் அருளிச்செய்வாராம்.

ஒன்றுந் தேவுமுலகுமுயிரும்மற்றும் யாதுமில்லா
வன்று *நான்முகன்தன்னொடு தேவருலகோடுயிர்படைத்தான்*
குன்றம்போல்மணிமாடநீடு திருக்குருகூரதனுள் *
நின்றவாதிப்பிரான் நிற்க மற்றைத்தெய்வம்நாடுதிரே.

| | |
|---|---|
| தேவும் | - தேவர்களும் |
| உலகும் | - அவர்களுக்கிருப்பிடமான உலகங்களும் |
| உயிரும் | - மனிதர் முதலிய பிராணிகளும் |
| மற்றும் யாதும் | - மற்றுமுள்ள எல்லாமும் |
| ஒன்றும் இல்லா அன்று | - சிறிதுமில்லாத அந்த ஊழிக் காலத்திலே |
| நான்முகன் தன்னொடு | - பிரமனையும் |
| தேவர் | - தேவதைகளையும் |
| உலகு | - உலகங்களையும் |
| உயிர் | - பிராணிகளையும் |
| படைத்தான் | - படைத்தவனும் |
| நின்ற | - சாஸ்திரங்களில் நிலைத்திருப்பவனுமான |
| ஆதி பிரான் | - ஆதிநாதனென்னும் எம்பெருமான் |
| குன்றம்போல் | - மலைபோன்ற |
| மணிமாடம் நீடு | - திருமாளிகைகள் உயர்ந்திருக்கப்பெற்ற |
| திரு குருகூர் அதனுள் | - திருநகரியிலே |
| நிற்க | - காட்சியளித்துக்கொண்டிருக்கும்போது |
| மற்றைதெய்வம் | - வேறு தெய்வங்களை |
| நாடுதிர் ஏ | - தேடிப் போகின்றீர்களே. |

* -- ஸகலஜகத் காரண பூதனான ஸர்வேஸ்வரன் திருநகரியிலே எளியனாய்க் காட்சி தந்தருளாநிற்க, வேறு தெய்வத்தைத் தேடி யோடுகிறீர்களே! இது என்ன அறிவு கேடு! என்று வெறுக்கிறார்.

எம்பெருமானுடைய ஜகத்காரணத்வத்தை மூதலிப்பன முன்னடிகள். ஒன்றும் என்பதை மேலுள்ள தேவும் இத்யாதிகளுக்கு விசேஷணமாக அந்வயிப்பதும், "தேவுமுலகு முயிறும் மற்றும் யாதும் இல்லாவன்று" என்று அந்வயித்து உரைப்பதும் பொருந்தும். விசேஷணமாக அந்வயிப்பதனால், ஒன்றுதல் -- பொருந்துதலாய், அதாவது லயிப்பதாய், *தம:பரே தேவ ஏகீ பவதி *என்கிறபடியே, காரியத்திற்குக் காரணத்திலே லயமாகச் சொல்லுகையாலே காரண பூதனான தன்பக்கலிலே சென்று ஒன்றுகிற (அதாவது, லயமடைகிற) தேவும்-- தேவஜாதியும், உலகும் --அத்தேவர்களின் இருப்பிடங்களும், உயிரும் -- மனிசர் முதலிய பிராணிவர்க்கமும், இப்படி பிரித்துப் பிரித்துச் சொல்லவேண்டாதபடி எதுவுமே இல்லாமலிருந்த ஊழிகாலத்திலே முந்துற முன்னம் நான்முகனைப் படைத்து, அவன் வழியாக தேவஜாதியையும் அவர்களுக்கு இருப்பிடமான லோகங்களையும் இவ்வருகே சேதநவர்க்கங்களையும் ஸ்ருஷ்டித்தானாயிற்று எம்பெருமான் என்று கொள்க.

இங்கே நம்பிள்ளை ஈட்டில் விநோதமாக அருளிச்செய்வதொரு ஸ்ரீஸூக்தி காண்மின்; -"ஸர்வேச்வரன் சதுர்முகனை ஸ்ருஷ்டித்தான்; சதுர்முகன் பஞ்சமுகனை ச்ருஷ்டித்தான்,

பஞ்சமுகன் ஷண்முகனை ஸ்ருஷ்டித்தான். ஆக இதுதான் பஹுமுகமாயிற்றுக் காணும்."

ஆக இப்படிப்பட்ட ஸர்வேச்வரன் உங்களுக்குக் கண்ணாலே கண்டு ஆச்ரயிக்கலாம்படி, மலைபோன்ற அழகிய மணிமாடங்கள் உயர்ந்திருக்கிற திருநகரியிலே 'நம்மைக் காணவருவார் ஆரேனும் உண்டா?' என்று நின்று நின்று எதிர்பார்த்திருக்க, வேறேயொரு தெய்வத்தை அந்தோ! தேடித்திரிகின்றீர்களே!

* வாஸுதேவம் பரித்யஜ்ய யோந்யம் தேவமுபாஸதே । த்ருஷிதோ ஜாஹ்நவீதீரே கூபம் கநதி துர்மதி: * என்கிற ச்லோகம் இவ்விடத்திற்குப் பொருந்த அநுஸந்திக்கத்தகும். தாஹித்தவதன், கங்கை பெருகியோடுமிடத்திலே அதிலே அள்ளிக் குடித்துத் தன்விடாய் தீரமாட்டாதே அதன் கரையிலே குந்தாலிகொண்டு கிணறுகல்ல முயலுமாபோலே இருந்தது இவர்களுடையபடி. திருமாலையில் "கேட்டிரே நம்பிமீர்காள்! கெருடவாகனனும் நிற்கச், சேட்டைதன் மடியகத்துச் செல்வம்பார்த்திருக்கின்றீரே." என்ற பாசுரமும் இங்கு நினைக்கத்தகும்.

திருக்குருகூர் -- இது பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டில் ஒன்று; ஆழ்வார் திருநகரியென வழங்கப்படுமது. குருகாபுரீ என்பது வடமொழிவழக்கு.

> நாடிநீர்வணங்கும் தெய்வமும் உம்மையும் முன்படைத்தான் *
> வீடில்சீர்புகழாதிப்பிரான் அவன்மேவியுறைகோயில் *
> மாடமாளிகைசூழ்ந்தழகாய திருக்கூரதனை *
> பாடியாடிப்பரவிச்சென்மின்கள் பல்லுலகீர்! பரந்தே.

| | |
|---|---|
| பல் உலகீர் | - பலவகைப்பட்ட உலகர்களே |
| நீர் | - நீங்கள் |
| நாடி | - தேடி |
| வணங்கும் | - வணங்கும்படியாயுள்ள |
| உம்மையும் | - உங்களையும் |
| முன் படைத்தான் | - முன்னம் படைத்தவனும் |
| வீடு இல் சீர் | - நித்யஸித்தங்களான திருக்குணங்களாலுண்டான |
| புகழ் | - புகழையுடையனுமான |
| ஆதி பிரான் | - ஆதிநாதன் |
| அவன் மேவி உறை கோயில் | - விரும்பி எழுந்தருளியிருக்குமிடமான |
| மாடம் மாளிகை | - மாடமாளிகைகளால் |
| சூழ்ந்து | - சூழப்பட்டு |
| அழகு ஆய | - அழகு வாய்ந்த |
| திரு குருகூர் அதனை | - திருநகரியை |
| பாடி ஆடி | - பாடுதலும் ஆடுதலும் செய்துகொண்டு |
| பரவி | - துதித்து |
| பரந்து செல்மின்கள் | - எல்லாவிடத்திலும் பரவி நடவுங்கள். |

* -- உலகர்களே! நீங்கள் எந்த தெய்வங்களைப் பணிகின்றீர்களோ, அந்த தெய்வங்களோடு உங்களோடு ஒரு வாசியில்லை. நீங்கள் எப்படி கார்யபூதர்களோ அப்படியே அவர்களும் கார்யபூதர்களேயல்லது காரணபூதர்களல்லர். ஆகையாலே, அவர்களை நீங்கள் ஆச்ரயிப்பது போல உங்களையும் அவர்கள் ஆச்ரயிக்கலாம். உங்களைக் காட்டிலும்

அவர்களுக்குச் சிறிது ஞானமும் சக்தியும் ஏறியிருக்கிறது என்கிற இவ்வளவேயல்லது வேறொரு வாசியில்லை கிடீர். உங்களோடு அவர்களோடு வாசியற அனைவர்க்கும் காரணபூதனான ஸ்ரீமந்நாரயணன் காட்சி தந்தருளுமிடமாகிய திருநகரியைப் பணியுங்கோளென்கிறார்.

**நீர்நாடிவணங்கும் தெய்வமும்** -- நாடுதலாவது தேடுதல். உங்களால் தேடிவணங்கப்படுகிற தெய்வங்களையும் என்றபடி. சாஸ்த்ரங்களானவை *ஸோந்வேஷ்டவ்யஸ் ஸவிஜிஜ்ஞாஸிதவ்ய: *என்று பரமபுருஷனைத் தேடவேண்டும் என்று சொல்லாநிற்க, அந்தோ! நீங்கள் காபுருஷர்களைத் தேடி யோடுவதே! என்று கர்ஹிக்கிறபடி. எம்பெருமான் உங்களைத் தேடாநிற்க, நீங்கள் நீசர்களைத் தேடியோடாநிற்கிறீர்களே! என்றுமாம்.

இங்கே நம்பிள்ளையீடு. -- "கள்ளரைத் தேடிப்பிடிக்குமாப்போலே தேடிப்பிடிக்கவேண்டியிருக்கிறபடி. ஆடு திருடினகள்ளரிறே இவர்கள்தாம்".-- ஜீவஹிம்ஸையையே ஆராதனமாகக் கொண்டிருக்கிற க்ஷுத்ர தெய்வங்களென்று காட்டினபடி.

**வீடு இல் சீர்புகழ்** = சீர் என்பதற்கு செல்வம் என்கிற பொருளும் குணம் என்கிற பொருளும் உண்டு. ஒருநாளுங் குறையாத செல்வங்களையுடையவன் என்றும், நித்யஸித்தங்களான திருக்குணங்களையுடையவன் என்றும் கொள்க.

**அவன்மேவியுறைகோயில்** என்றவிடத்து நம்பிள்யைீடு : -- "அவன் பரமபதத்தில் உள்வெதுப்போடே போலேகாணுமிருப்பது. ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை அநுஸந்தித்து 'இவை என்படுகிறனவோ' என்று திருவுள்ளத்தில் வெறுப்போடேயாயிற்று அங்கிருப்பது. 'பரமபதத்திலும் ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை யநுஸந்தித்துத் திருவுள்ளத்தில் வெதுப்போடேயாயிற்று எழுந்தருளியிருப்பது' என்று பட்டர் அருளிச்செய்ய, ஆச்சானும் பிள்ளையாழ்வானும் இத்தைக்கேட்டு 'பரமபதத்திலே ஆநந்த நிர்பரனாயிருக்கிற விருப்பிலே திருவுள்ளத்திலே ஒரு வ்யஸநத்தோடே இருந்தானென்கை உசிதமோ?' என்றார்கள் -- என்று பண்டிதரென்கிறவர் வந்து விண்ணப்பஞ்செய்ய, *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருமாம் பவதி து:கித:. * என்றது குணப்ரகரணத்திலேயோ தோஷப்ரகரணத்திலேயோ வென்று கேட்கமாட்டிட்டிலீறோ? இது குணமாகில் குணமென்று பேர் பெற்றவற்றில் அங்கில்லாததொன்று உண்டோ என்றருளிச்செய்தார்."

இந்த ஐதிஹ்யம் இங்கு அருளிச்செய்ய ப்ரஸக்தி ஏதென்னில்; மூலத்தில் "அவன் மேவியுறைகோயில்" என்றுள்ளது; மேவியுறைதலாவது ஆசையோடு வாழ்தல்; பரமபதத்தில் பட்ட துக்கம் இங்குத் தீரப்பெறுவோமென்று ஆசைப்பட்டு வாழ்தலென்றே பொருள் சொல்லவேண்டியிருத்தலால், பரமபதத்திலும் பெருமானுக்கு து:க்க ப்ரஸக்தியுண்டோ என்று சங்கை உண்டாகுமாதலால் அதைப் பரிஹரிக்க ஐதிஹ்யமருளிச் செய்தபடி.

எம்பெருமானை ஸமஸ்த கல்யாண குணாத்மகன் என்றும் * உயர்வறவுயர் நலமுடையவன் என்றும் கூறுகின்றவர்கள், "ஒன்றொழியாமே ஸகலகுணங்களும் அப்பெருமானிடத்தே யிருக்கின்றன" என்று இசைந்தே தீரவேண்டும். ஒரு குணம் இல்லை செய்யப்பட்டாலும் *ஸமஸ்த கல்யாண குணாம்ருதோததி: * என்று சொல்வதற்குக் குறை நேர்ந்ததாகும். துக்கப்படுவதென்பது கல்யாணகுணமன்றே; அது ஹேய குணமாயிற்றே என்று சிலர் கலங்குவர்கள். ஸ்வார்த்தமான சோகம் ஹேயமல்லது பரார்த்தமான சோகம் ஹேயமேயன்று. அதுதான் சிறந்த குணமெனப்படும். ஆனதுபற்றியே இராமபிரானுடைய சுப குணங்களை எடுத்துரைக்கின்ற அயோத்யாவாஸி ஜனங்கள் *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித: *என்றார்கள். எம்பெருமானாரும் ஸ்ரீபாஷ்யத்தில் *தயாஹிநாம -- ஸ்வார்த நிரபேக்ஷா பரது:காஸஹிஷ்ணுதா * என்றருளிச் செய்தார். ஸஹஸ்ரநாமத்திலே விகர்த்தா என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலே "ஸ்வார்த்த ஹர்ஷமோகாத்யபாவேபி

பரார்த்தத் ப்ரஸக்தி: அதோஷ: ; அந்யதாபரது:கது:கித்வாதய: குணா:கதமஸ்யஸ்யு:" இதன் கருத்து :- தமக்காக இன்பதுன்பங்கள் இல்லாமலிருந்தும் பிறர் இன்பதுன்பங்களை அநுபவிப்பதனால் தாம் இன்ப துன்பங்களையடைந்து விகாரப்படுகிறவர். இந்த விகாரம் பிறரிடத்திலுள்ள அன்புபற்றியதாதலால் ஈச்வரனுக்குக் குற்றமாகாது." -- என்று பட்டர் ஸ்பஷ்டமாகவே அருளிச்செய்தார்.

எம்பெருமான் அனுபவிக்கிறதாகச் சொல்லப்படுகின்ற துக்கம் மெய்யானதா, பொய்யானதா என்கிற விசாரமே அவசியமற்றது. எம்பெருமானென்று ஒருவனுளனென்றும் அவன்றான் ஸமஸ்த கல்யாணகுணநிதியென்றும் இசைகின்றவர்கள் அப்பெருமானைப் பரது:க்க து:க்கியாக இசைந்தே தீரவேணும். இக்குணம் அவனுக்குப் பொருந்தாது என்பவர்கள் நிர்க்குண ப்ரஹ்மவாதிகளேயாவர். இத்யந்யத்ர விஸ்தர: .

முதற்பாட்டில் "திருக்குருகூரதனுள் நின்றவாதிப்பிரான்" என்று எம்பெருமானளவுஞ் சென்று பேசின ஆழ்வார் இப்பாட்டில் "திருக்குருகூரதனைப் பாடியாடிப் பரவிச்சென்மின்கள்" என்கிறார். எம்பெருமானிற்காட்டிலும் அவன் உகந்தருளினவிடமே பரமப்ராப்யம் என்று காட்டினபடி. திவ்யதேசத்திலே சென்று சேர்ந்து சேவிப்பதிலுங்காட்டில் வழிப்போக்குத்தானே மிக இனிதாகையாலே **பாடியாடிப் பரவிச்சென்மின்கள்** என்கிறார்.

பரந்தே என்றவிடத்து ஈடு :- "பெரிய திருநாளுக்கு ஸர்வதோதிக்க மாக வந்தேறுமாப்போலே நாநாதிக்கமாகப் பாடியாடிப் பரவிச்சென்மின்கள்."

பரந்த தெய்வமும் பல்லுலகும்படைத்து அன்றுடனேவிழுங்கி *
கரந்துமிழ்ந்துகடந்திடந்தது கண்டும்தெளியகில்லீர் *
சிரங்களாலமரர்வணங்கும் திருக்குருகூரதனுள் *
பரன்திறமன்றிப்பல்லுலகீர்! தெய்வம்மற்றில்லைபேசுமினே.

| | |
|---|---|
| பரந்த | - விஸ்தீர்ணமான |
| தெய்வமும் | - தேவதாவர்க்கங்களையும் |
| பல் உலகும் | - (அவர்களுக்குப்) பல உலகங்களையும் |
| படைத்து | - ஸ்ருஷ்டித்தும் |
| அன்று | - பிரளயம் வந்த காலத்திலே |
| உடனே விழுங்கி | - எல்லாவற்றையும் ஒரு சேர விழுங்கி |
| கரந்து | - உள்ளே ஒளித்து வைத்தும் |
| உமிழ்ந்து | - பிறகு வெளிப்படுத்தியும் |
| கடந்து | - (மஹாபலியிடத்தில் தானம் பெற்று) அளந்துகொண்டும் |
| இடந்தது | - (மஹாவராஹமாய்) இடந்தெடுத்தும் |
| | ஆக இப்படிச்செய்த காரியங்களை |
| கண்டும் | - பிரமாணங்களாலே கண்டறிந்து வைத்தும் |
| தெளிய கில்லீர் | - தெளியமாட்டாத |
| பல் உலகீர் | - பலவகைப்பட்ட உலகத்தவர்களே! |
| அமரர் | - தேவர்கள் |
| சிரங்களால் வணங்கும் | - தலையால் வணங்கப்பெற்ற |
| திரு குருகூர் அதனுள் | - திருநகரியில் எழுந்தருளியிருக்கிற |
| பரன் | - பரம புரஷனுக்கு |

| | |
|---|---|
| திறம் அன்றி | - பிரகாரமாயல்லது |
| மற்று | - வேறு ஸ்வதந்திரமாய் இருப்பதொரு |
| தெய்வம் இல்லை | - தேவதை கிடையாது. |
| பேசுமின் | - அப்படிப்பட்ட தேவதை ஒன்று உண்டாகில் சொல்லுங்கள். |

* உலகங்களை ரக்ஷித்தருள்வதற்காக எம்பெருமான் செய்து போரும் செயல்களை ஆராய்ந்து பார்த்தாலும் இவனே பரம புருஷனென்று அறியப்போதுமென்கிறார்.

தேவவர்கம் முதற்கொண்டு பலவுலகங்களையும் படைத்தலும், *மண்ணாடும் விண்ணாடும் வானவரும் தானவரும் மற்றுமெல்லாம் உண்ணாத பெருவெள்ள முண்ணாமல் தான் விழுங்கி உண்ணக்கொண்டதும், பிறகு வெளிநாடுகாணப் புறப்படவிட்டதும், வாமனாவதாரம் பண்ணி மூவடி நீரேற்றுப் பெற்று அளந்து கொண்டதும், மஹாவராஹமாய் அண்டபித்தியில் நின்றும் ஒட்டு விடுவித்தெடுத்துக்கொண்டதுமாகிய இத்தகைய செயல்களைக் கொண்டே இவனே பரதேவதை என்று திண்ணமாக எண்ணலாயிருக்க, அந்தோ! தெளிவுபெற மாட்டிற்றிலீரே என்கிறார் முன்னடிகளில்.

எந்த தெய்வங்களை நீங்கள் சென்று பணிகின்றீர்களோ அந்த தெய்வங்களும் வந்து தலையாலே வணங்கும் திருக்குருகூரில் பரத்வம் பொலிய நிற்கும் பெருமானுக்குச் சரீரமல்லாத தெய்வம் ஒன்றுண்டோ? *ஸ ஆத்மா அங்காந்நந்யா தேவதா: என்னும்படியாக வன்றோ ஸகல தெய்வங்களுமிருக்கின்றன. ஸ்ரீமந் நாராயணனைப் போலே ஸ்வதந்த்ரமான தெய்வம் ஒன்றுண்டாகில் எடுத்துப் பேசுங்கள் என்கிறார்.

> பேசநின்றசிவனுக்கும் பிரமன்தனக்கும் பிறர்க்கும்
> நாயகனவனே * கபாலநன்மோக்கத்துக்கண்டுகொண்மின் *
> தேசமாமதிள்சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள் *
> ஈசன்பாலோரவம்பறைதல் என்னாவதிலிங்கியர்க்கே ?

| | |
|---|---|
| பேச நின்ற | - உங்களால் பரதெய்வமாகப் பேசப்படுகின்ற |
| சிவனுக்கும் | - ருத்ரனுக்கும் |
| பிரமன் தனக்கும் | - (அவனது தந்தையான) பிரமனுக்கும் |
| பிறர்க்கும் | - மற்றுமுள்ள தேவதைகளுக்கும் |
| நாயகன் அவனே | - தலைவன் ஸ்ரீமந்நாராயணனே என்னுமிடத்தை |
| கபாலம் நல் மோக்கத்து | - கபாலமோக்ஷக் கதையினால் |
| கண்டுகொண்மின் | - தெரிந்து கொள்ளுங்கள். |
| தேசம் | - தேஜஸ் பொருந்திய |
| மா | - சிறந்த |
| மதிள் சூழ்ந்து | - மதிள்களால் சூழப்பட்டு |
| அழகு ஆய | - அழகு பெற்றதான |
| திரு குருகூர் அதனுள் | - திருநகரியில் எழுந்தருளியிருக்கிற |
| ஈசன் பால் | - ஸர்வேச்வரன் விஷயத்திலே |
| ஓர் அவம் பறைதல் | - தப்பான பேச்சுக்களைப் பேசுவது |
| இலிங்கியர்க்கு | - லிங்கபிரமாண வாதிகளுக்கு |
| என் ஆவது | - என்ன பலனைத்தரும்!. |

∗ அநுமாநத்தாலே ஈச்வரனை ஸாதிக்கவிரும்புமவர்களும் பசுபதியே ஸர்வேச்வரனென்று கூறுபவர்களுமான சிலரை இப்பாசுரத்தாலே நிராகரித்தருளுகிறார். இலிங்கியர்க்கு என்றது ஹேதுவாதிகளுக்கு என்றபடி. அநுமானத்தைக் கொள்பவர்களே ஹேதுவாதிகளாவார்கள். சப்தப்ரமாணமான சாஸ்திரத்தின் முன்னே வேறு எந்த ப்ரமாணமும் நிற்கமாட்டாதாகையாலே அந்த சாஸ்த்ர ப்ரமாண விருத்தமாக இலிங்கியர் பேசுவது பொருளற்றது என்று நிரூபிக்கிறார். **இலிங்கியர்** -- லிங்கவாதிகள். லிங்கமாவது ஹேது. அநுமாநமென்கை.

ஒரு காலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்ற தென்று கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன் கையில் ஒட்டிக்கொள்ளளுதலும் அவன் 'இதற்கு என்செய்வது' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந் தொலையப் பிச்சையெடுக்கவேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பல தலங்களிலுஞ் சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காததாக, பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தையடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயண மூர்த்தியை வணங்கி இரந்தபோது அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட உடனே அதுநிறைந்து கையைவிட்டு அகன்றது என்பது கபாலநன்மோக்க வரலாறு. கொலையுண்பவனும் கொலைசெய்பவனுமான பிரமனும் உருத்திரனும் பரதெய்வமாக இருக்கத் தகுதியுடையரல்லரென்பது இக்கதையினால் தெற்றென விளங்கும்.

வேதத்தில் ∗நஸந்நசாஸச்சிவ ஏவ கேவல: ∗ என்றும் ∗ ஏகஃவருத்ரோ நத்விதீயாய தஸ்தே ∗ என்றும், ∗ஹிரண்ய கர்பஸ் ஸமவர்த்தாக்ரே பூதாஸ்யஜாத: பதிரேக ஆஸீது ∗ என்றும் சொல்லியிருப்பவற்றைப் பற்றிக் கொண்டு சிலர் சிவனுக்குப் பாரம்யத்தையும் பேசுவதுண்டாதலால் ஆழ்வார் அதைத் திருவுள்ளம்பற்றிப் "பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும்" என்கிறார். 'பேசநின்ற' என்பது சிவனுக்குப் போலவே பிரமனுக்கும் அடைமொழியாகத்தகும். சில மூலைகளிலே இவர்களுக்குப் பரத்வம் தோன்றும்படியான வசநவ்யக்திகள் இருந்தாலும் ∗ஸ்ருஜதஸ்தஸ்ய தேவஸ்ய பத்மம் ஸூர்ய ஸமப்ரபம்| நாப்யாம் விநிஸ்ஸ்ருதம் பூர்வம் தத்ரோத்பந்ந: பிதாமஹ: - என்றும், ∗யத் தத் பத்மமபூத் பூர்வம் தத்ர ப்ரஹ்மா வ்யஜாயத, ப்ரஹ்மணச்சாபி ஸம்பூதச் சிவ இத்யவதார்யதாம் ∗ என்றும், ∗ ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்ட்யாய ச்ரேஷ்டாய ∗ என்றும் ∗மஹாதேவஸ் ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வா ஆத்மாநம் தேவதேவோ பபூவ ∗ என்றுமுள்ள நூற்றுக்கணக்கான பிரமாணங்களுக்குச்சேர நிர்வஹிக்கவேண்டுகையாலே அப்படி நிர்ணயித்தருளின பரம வைதிகரான ஆழ்வார் "சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகனவனே" என்று துணிந்து அருளிச்செய்கிறார்.

இங்கே நம்பிள்ளை ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் :-

"நீங்கள் ஈச்வரர்களாக சங்கித்தவர்களிருவரும் நின்றநிலை கண்டதே. ஒருவன் தலை கெட்டு நின்றான். ஒருவன் ஓடுகொண்டு ப்ராயச்சித்தியாய் நின்றான். ஓட்டையோடத்தோடு ஒழுகலோடமாய், உங்கள் குறைதீரப் பற்றுகிற நீங்கள் உங்களிலும் பெருங்குறைவாளரையோ பற்றுவது? 'பாதகியாய் பிக்ஷைபுக்குத் திரிந்தான்' என்று நீங்களே சொல்லி வைத்து, அவனுக்குப் பரத்வத்தைச் சொல்லவோ? ஒருவனுடைய ஈச்வரத்வம் தலையோடே போயிற்று. மற்றொருவனுடைய ஈச்வரத்வம் அவன் கையோடேயென்று காட்டிக்கொடுக்கிறார் (கண்டுகொண்மின்.) உந்தம் அகங்களிலே நீங்கள் எழுதியிட்டுவைத்த க்ரந்தங்களைப் பார்த்துக்கொள்ள மாட்டிகோளோ முன்னேநின்று பிதற்றாதே யென்கிறார்."

தேசம் =தேஜஸ் என்கிற வடசொல் திரிபு. தேசுபொலிந்த திருமதிளாலே சூழப்பட்டு அழகாய திருநகரியிலே நிற்கிற ஸர்வேச்வரன் பக்கலிலே குறை கூறும்படியான தௌர்ப்பாக்யமுண்டாயிற்றே! என்று வெறுக்கிறார்.

> இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும்சாக்கியரும் *
> வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநுந்தெய்வமுமாகிநின்றான் *
> மலிந்து செந்நெல்கவரிவீசும் திருக்குருகூரதனுள் *
> பொலிந்துநின்ற பிரான்கண்டீர் ஒன்றும் பொய்யில்லைபோற்றுமினே.

| | |
|---|---|
| இலிங்கத்து இட்ட | - லிங்கமாகிய விஷயமாகக் கல்பிக்கப்பட்ட |
| புராணத்தீரும் | - புராணத்தைப் பற்றினவர்களாயும் |
| சமணரும் | - ஜைநர்களாயும் |
| சாக்கியரும் | - பௌத்தர்களாயும் |
| வலிந்து வாது செய்வீர்களும் | - விதண்டாவாதம் செய்பவர்களாயுமிருக்கிற நீங்களாகவும் |
| மற்றும் நும் தெய்வமும் | - தேவதாந்தரங்களாகவும் |
| ஆகிநின்றான் | - (இப்படி ஸர்வசரீரகனான) |
| பொலிந்து நின்ற பிரான் | - பொலிந்துநின்ற பிரான் என்கிற எம்பெருமானை, |
| செந்நெல் | - செந்நெற்பயிர்களானவை |
| மலிந்து | - ஸம்ருத்திபெற்று |
| கவரி வீசும் | - சாமரை வீசப்பெற்ற |
| திரு குருகூர் அதனுள் | - திருநகரியிலே |
| கண்டீர் | - ஸேவியுங்கோள். |
| ஒன்றும் | - எள்ளளவும் |
| பொய் இல்லை | - அஸத்யமில்லை |
| போற்றுமின் | - துதியுங்கோள். |

* லைங்கணபுரம் முதலாகச் சில குத்ருஷ்டி ஸ்ம்ருதிகளையும் பாஹ்ய ஸ்ம்ருதிகளையும் ப்ரமாணமாகக்கொண்டு பேசவந்தவர்களை நிராகரித்தருளுகிறார்.

புராணங்களானவை ராஜஸங்களென்றும் தாமஸங்களென்றும் ஸாத்விகங்களென்றும் பாகுபாடுற்றிருக்கின்றன. * அக்நேஶ்ஶிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்திதம், ராஜஸேஷு சமஹாத்ம்யம் அதிகம் ப்ரஹ்மணோவிது:। ஸாத்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்ம்யம் அதிகம் ஹரே: ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ரூணாம் ச நிகத்யதே.* (தாமஸ கல்பங்களில் அக்நியினுடையவும் சிவனுடையயும் மாஹாத்ம்யத்தையும், ராஜஸகல்பங்களில் நான்முகனுடைய மாஹாத்மியத்தையும் ஸாத்விக கல்பங்களில் ஸர்வேச்வரனுடைய மாஹாத்ம்யத்தையும், முக்குணங்களும் கலசின ஸங்கீர்ண கல்பங்களில் பித்ருக்களினுடையவும் ஸரஸ்வதியினுடையவும் மாஹாத்மியத்தையும் பேசியிருப்பதாக மஹர்ஷிகளே கூறிவைத்தார்கள்.

ஸ்ரீவிஷ்ணுபுராணம் எப்படி அவதரித்திருக்கின்றதென்பதைச் சிறிது உற்றுப்பார்க்கவேணும். *யந்மயம் ச ஜகத் ப்ரஹ்மந் யதச்சைதச் சராசரம்। லீநமாஸீத் யதா யத்ர லயமேஷ்யதி யத்ர ச * என்று பொதுவிலே கேள்விகேட்க; *விஷ்ணோஸ்ஸகாஶாத் உத்பூதம் ஜகத் தத்ரைவ ச ஸ்திதம்; ஸ்திதிஸம்யம கர்த்தாஸௌ ஜகதோஸ்ய ஜகச் ச ஸ: * என்று விடை அழகாக அவதரித்திருக்கின்றது. இப்படியல்லாமல், எருமையை யானையாகக்

கவிபாடித்தரவேணு மென்பாரைப் போலே லிங்கத்துக்குப் பெருமையிட்டுச் சொல்லவேணுமென்று கேள்வியாய், அதன்மேற்பிறந்தது லிங்கபுராணமாகையாலே **இலிங்கத்து இட்ட புராணத்தீரும்** என்று ஆழ்வார் மருமத்தை வெளியிட்டுப் பேசியருளினாராயிற்று. * யா வேதபாஹ்யா: ஸ்ம்ருதயோ யாச் ச காச் ச குத்ருஷ்டய:, ஸர்வாஸ் தா நிஷ்பலா: ப்ரேத்ய தமோநிஷ்டாஹி தா: ஸ்ம்ருதா: . * என்று மநுமஹர்ஷி சொல்லி வைத்ததும் அறியத் தக்கது.

இப்படிப்பட்ட பாஹ்யகுத்ருஷ்டிமத நிஷ்டர்களை விளித்து, 'நீங்களும் நீங்கள் தொழுகிற தெய்வங்களும் அவனேயாகி நின்றான்' என்று இங்கு ஆழ்வார் அருளிச்செய்வது * அந்த: ப்ரவிஷ்டம்ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா * அஹம் பவோ பவந்தச்ச ஸர்வம் நாராயணாத்மகம் * தவாந்தராத்மா மமசயேசாந்யே தேஹிஸஞ்ஜிதா: * இத்யாதி ப்ரமாணங்களை உட்கொண்டாம். சிவபிரான் திரிபுரமெரித்த வரலாற்றை நன்குணர்ந்தால் ஒவ்வொரு தேவதைக்கும் எம்பெருமானே உயிராகி நிற்பவன் என்பது புலனாகும்.

இப்படி ஸர்வாந்தராத்மாவாக இருக்கும் ஸர்வேச்வரன் ப்ரத்யக்ஷபூதனல்லன் என்று கண்ணழிவு சொல்லவொண்ணாதபடி திருநகரியிலே ஸந்நிஹிதனாய், பரமபதத்திலுங்காட்டில் இங்கே தன் திருக்குணங்கள் நன்கு விளங்கப் பெற்றதனால் பொலிந்து நின்ற பிரானென்று திருநாமம் அணிந்து விளங்கும் பெருமானை ஸேவித்து, நாம் உபபாதிக்கும் எல்லாக்குணங்களையும் அந்தத் திருமூர்த்தியிலே அநுபவித்து மங்களாசாஸநம் பண்ணுங்கோள் என்கிறார் பின்னடிகளால்.

போற்றிமற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டு * உம்மையின்னே
தேற்றிவைத்தது எல்லீரும்வீடுபெற்றால் உலகில்லையென்றே *
சேற்றில்செந்நெல்கமலமோங்கு திருக்குருகூரதனுள் *
ஆற்றவல்லவன்மாயம்கண்டீர் அதறிந்தறிந்தோடுமினே.

| | |
|---|---|
| மற்று ஓர் தெய்வம் | - வேறொரு தேவதையை |
| போற்றி | - துதித்து |
| பேண | - ஆதரிக்கும்படியாக |
| புறத்து இட்டு | - வேறுபடுத்தி |
| உம்மை | - உங்களை |
| இன்னே | - இப்போது நீங்களிருக்கிற விதமாக |
| தேற்றி வைத்தது | - தேவதாந்தரங்களை நம்பும்படியாக (எம்பெருமான்) செய்து வைத்ததானது |
| எல்லீரும் | - எல்லாரும் (எதற்காகவென்றால்) |
| வீடு பெற்றால் | - முக்தியடைந்தால் |
| உலகு இல்லை என்றே | - புண்யபாப விஷயமான சாஸ்த்ர மரியாதை குலைந்துபோகுமென்கிற காரணத்தாலேயாகும். |
| சேற்றில் | - சேற்றுநிலத்தில் |
| செந்நெல் | - செந்நெற்பயிர்களும் |
| கமலம் | - தாமரையும் |
| ஓங்கு | - ஓங்கி வளரப்பெற்ற |
| திரு குருகூர் அதனுள் | - திருநகரியிலே எழுந்தருளியிருக்கின்ற |
| ஆற்ற வல்லவன் | - பரமசக்தியுக்தனான பெருமானுடைய |

மாயம் கண்டீர் - மாயையேயாமத்தனை
அது அறிந்து - மாயையென்பதை தெரிந்துகொண்டு
ஓடுமின் - திருவடியேசென்று சேரப்பாருங்கள்.

* ஸ்ரீமந்நாராயணனே ஸர்வேச்வரனாகில் அவன் தன்னையே ஆச்ரயிக்கும்படி எங்களைப் பண்ணாமல் இதர தெய்வங்களைத் தொழுமாறு எங்களைச் செய்து வைத்தது ஏன்? என்று சிலர் கேட்பதாகக் கொண்டு அவர்களுக்கு உத்தரமளிக்கும் பாசுரம் இது. உங்கள் பாபந்தான் அதற்குக் காரணம் என்று விடை கூறிற்றாகிறது.

இப்பாசுரத்தில் **எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லையென்றே** என்பது தான் மருமமாக உள்ளது. ஆபாதாப்ரதீதியில் இதற்கு என்ன பொருள் தோன்றுமென்றால் : எல்லோரும் ஸ்ரீமந்நாராயணனையே தொழப்பெற்றால், எல்லோருமே வீடுபெற்றுவிட்டால் லீலாவிபூதி அடியற்றுப்போய்விடும். அங்ஙனம் போகாமைக்காகவே எம்பெருமான் உங்களை இதர தேவதா பஜநம் பண்ணி ஸம்ஸாரிகளாய்த் தொலைந்துபோம்படி செய்துவைத்தான் -- என்பதாகப் பொருள்தோன்றும். இப்படிப்பட்ட பொருள் எம்பெருமானுக்கு மிக்க அவத்யத்தை விளைக்குமதாகையாலே ஆழ்வார் இப்பொருள்பட அருளிச்செய்ய ப்ரஸக்தியில்லை. ஆறாயிரப்படி முதலிய வியாக்கியானங்களில் இங்ஙனே பொருள் நெஞ்சாலும் நினைக்கப்படவில்லை. ஆனால், திருவாய்மொழிக்கு ஸம்ஸ்க்ருத பதவுரையிட்டு (ஒன்பதினாயிரப்படி இயற்றிய) தசோபநிஷத் பாஷ்யகாரரான ஸ்ரீரங்கராமாநுஜ ஸ்வாமி இப்பொருளையே பணித்து வைத்தார். அவருடைய வாக்கியம் வருமாறு : "பவாத்ருசாம் ஸர்வஷாம் மோக்ஷலாபே லீலாவிபூத்யந்தர்பூதலோகாநாம் உச்சேதஏவ ஸ்யாதிதிமத்வைவ பகவதா ஸ்வவிஷய பக்திமநுத்பாத்ய தேவதாந்தரவிஷயே பக்திருத்பாதிதேதி பாவ:." என்பதாம்.

பிள்ளான் முதலிய ஸகல பூருவாசாரியர்களும் திருவுள்ளம்பற்றின பொருள் யாதெனில்; **உலகில்லையென்றே** என்ற விடத்தில் **உலகு** என்பதற்கு சாஸ்த்ரமர்யாதை என்று பொருள். அவரவர்கள் பண்ணின புண்யபாபரூப கருமங்களுக்குத் தக்கபடியே பலன் கொடுப்பதென்று ஒரு சாஸ்த்ரமரியாதை ஏற்பட்டிருக்கின்றது. நீங்கள் முற்பிறவிகளில் பிரபலமான தீவினைகளைச் செய்திருந்தபடியால் அவற்றின் பலனாக இப்பிறப்பில் உங்களை க்ஷுத்ரதேவதா பஜனம் பண்ணும்படியாக உபேக்ஷித்திடலாயிற்று. கொடிய பாவங்கள் செய்த உங்களை புண்யாத்மாக்களைப்போலே ஸ்ரீமந்நாராயண ஸமாச்ரயணமே செய்யும்படி பண்ணிவிடுவதனால் அப்போது முன்சொன்ன சாஸ்த்ரமரியாதை அழிந்துவிடுமன்றோ. அங்ஙனம் அழியாமைக்காகவே உங்களை இங்ஙனே நிறுத்திவைத்தது -- என்கை. வேதாந்த தேசிகனும் தாத்பர்ய ரத்நாவளியில் *தத்தத்கர்மாநுரூபம் பலவிதரணத: *என்று இவ்வர்த்தத்தையே வெளியிட்டருளினார்.

* மம மாயா துரத்யயா * என்று அவன்தானே கீதையில் சொல்லிவைத்தபடி தப்பவொண்ணாத இந்த மாயையை அவன் திருவடிகளைக் கட்டியே தப்பப்பாருங்கள் என்கிறார் பின்னடிகளில்.

ஓடியோடிப்பலபிறப்பும் பிறந்து மற்றோர்தெய்வம்
பாடியாடிப்பணிந்து * பல்படிகால் வழியேறிக்கண்டீர் *
கூடிவானவரேத்தநின்ற திருக்குருகூரதனுள் *
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக்கு அடிமைபுகுவதுவே.

| | |
|---|---|
| ஓடி ஓடி பலபிறப்பும் பிறந்து | - ஸம்ஸார சக்ரத்தில் ஓடியோடி பலபலயோனிகளிலே பிறந்து |
| பல் படி கால் | - வம்ச பரம்பரையாக |
| மற்று ஓர் தெய்வம் வழி ஏறி | - நூல்களிலே சொல்லியிருக்கிறபடி |
| பாடி ஆடி பணிந்து | - பலபடியாக வழிபட்டு |
| கண்டீர் | - பலன் கை புகுந்தமை கண்டீர்களே. |
| வானவர் | - தேவர்கள் |
| கூடி | - திரண்டு |
| ஏத்த நின்ற | - துதிக்கும்படி நின்ற |
| திரு குருகூர் அதனுள் | - திருநகரியிலே எழுந்தருளியிருக்கும் |
| ஆடு புட்கொடி ஆதிமூர்த்திக்கு | - ஆடுங்கருளக்கொடியுடைய ஆதிநாதப் பெருமாளுக்கு |
| அடிமை புகுவது | - அடியராய் இருக்கத் தகுதி. |

* தேவதாந்தரங்களை ஆச்ரயிப்பதனால் என்னபலன் உண்டாகுமோ அது உங்களுக்கு இதுவரையில் தெரியாமையில்லை. இந்நாள் வரையிலே கைகண்ட பலன்தான் இனிமேலும் காணக்கடவதாயிருக்கும். ஆனபின்பு கருளக்கொடியுடையானுக்கு அடிமை புகுவதுவே உறுவதென்கிறார்.

தேவதாந்தர பஜனத்தின் பலனை முன்னடிகளில் அருளிச்செய்கிறார். மற்றோர் தெய்வம் பாடியாடிப் பணிந்ததற்குப் பலன் ஓடியோடிப் பல பிறப்பும் பிறப்பதேயத்தனை என்றாராயிற்று. * ப்ரஹ்மாணம் சிதிகண்டம் ச யாச் சாந்யா தேவதா: ஸ்ம்ருதா: ப்ரதிபுத்தா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம் * (பிரமன் சிவன் முதலிய தேவதைகளைத் தொழுவதனால் அற்பபலனே கிடைக்குமாதலால் விவேகிகள் அத்தெய்வங்களைத் தொழுவதில்லை) என்கிற ப்ரமாணத்தை அடியொற்றி ஆழ்வார் அருளிச்செய்கிறபடியால் இங்கே ஒரு ஆக்ஷேபமும் இடம்பெறாது.

நீங்கள் தொழநிற்கிற தெய்வங்களும் வந்து தொழுது தத்தம் வாய்படைத்த பலன்பெறுமாறு தோத்திரம் செய்யுமிடமான திருக்குருகூரிலே ஸேவைஸாதிக்கின்ற பறவையேறு பரமபுருடனுக்கு அடிமை செய்வதே ஸ்வரூப ப்ராப்தமென்றாராயிற்று.

ஆடுபுள் = 'ஆடு' என்று வெற்றிக்கும் பெயராதலால் வென்றிக் கருடன் என்னவுமாம்.

புக்கடிமையினால்தன்னைக் கண்ட மார்க்கண்டேயனவனை *
நக்கபிரானுமன்றுய்யகொண்டது நாராயணனருளே *
கொக்கலர்தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள் *
மிக்கவாதிப்பிரான் நிற்க மற்றைத்தெய்வம்விளம்புதிரே.

| | |
|---|---|
| அடிமையினால் | - அடிமைசெய்து |
| புக்கு | - உள்புகுந்து |
| தன்னை கண்ட | - தன்னைக் காணப்பெற்ற |
| மார்க்கண்டேயனவனை | - மார்க்கண்டேயனென்று ப்ரஸித்தனானவனை |
| அன்று | - அக்காலத்தில் |
| நக்கபிரான் | - திகம்பரசாமியான ருத்ரன் |
| உய்யக்கொண்டதும் | - ரக்ஷித்ததும் |

| | |
|---|---|
| நாராயணன் அருளே | - நாராயணனுடைய அருளின் பயனேயாகும்; |
| கொக்கு அலர் | - கொக்குப்போலே வெண்ணிறமாக அலர்கின்ற |
| தட தாழை வேலி | - பெரிய தாழைகளை வேலியாகவுடைய |
| திரு குருகூர் அதனுள் | - திருநகரியிலே |
| மிக்க ஆதி பிரான் | - மேம்பாடுடைய ஆதிநாதப் பெருமாளிருக்க |
| மற்று எ தெய்வம் | - வேறு எந்த தேவதைகளை |
| விளம்புதீர் | - பேசுகிறீர்கள்? |

* மார்கண்டேயன் ருத்ரனை ஆராதித்துத் தன் அபேக்ஷிதம் பெற்றானே என்று சிலர் சொல்ல, அந்தக்கதையின் மருமமும் கேட்கலாகாதோ என்கிறார்.

ம்ருகண்டு என்னும் முனிவர் பிள்ளையில்லாக் குறையினால் பிரமனைக் குறித்துத் தவஞ்செய்தபோது, பிரமன் ப்ரத்யக்ஷமாகி 'முனிவரே! அறிவில்லாமையும் அங்கஹீநத்வமும் பெரும் பிணியும் தீயகுணங்களுடையவனாய் நூறு பிராயம் உயிர் வாழ்பவனான புத்ரனை விரும்புகின்றீரோ? அன்றி, கூர்மையான புத்தியும் அழகு பொலிந்த வடிவமும் ஆரோக்கியமும் நற்குணமுடையவனாய்ப் பதினாறு பிராயமே வாழ்பவனான குமாரனை விரும்புகின்றீரோ? சொல்லும்' என்ன, முனிவர், 'ஆயுள் சிறிதேனும் அறிவும் அழகும் குணமும் சிறந்து பிணியிலனாகும் ஸத்புத்ரனையே வேண்டுகிறேன்' என்று தம் கருத்தைக் கூற, நான்முகக் கடவுள் /1|/ குறிப்பு காண்க/ அவ்வாறே அநுக்ரஹித்தனர். அங்ஙனம் ஊழ்வினையாற் பதினாறுபிராயம் பெற்றுப் பிறந்த புத்திரனான மார்க்கண்டேயன் தனது அல்பாயுஸ்ஸைக் குறித்து வருந்திய தாய் தந்தையாரைத் தேற்றித் தான் விதியைக் கடந்து வருவதாகச் சொல்லி, தீர்காயுஸ்ஸு பெறுதற் பொருட்டுத் தினந்தோறும் சிவபூஜை செய்துவருகையில் ஒருநாள் யமன் தூதரையனுப்ப, அவர்கள் மார்க்கண்டேயனது தவக்கனலால் அவனை அணுகமாட்டாது அவன் செய்யும் சிவ பூஜைச் சிறப்பைக் கண்டஞ்சி வெருண்டோடி யமனிடம் செய்திசொல்ல, யமனும் கோபித்துத் தனது மந்திரியானை காலனை ஏவ, அவன் வந்து நயபயங்களாலழைக்கவும் மார்க்கண்டேயன் வரமாட்டேன் என்று சொல்லிவிட, பிறகு யமன் மிகக்கொதித்துத் தானே நேரில்வந்து மார்கண்டேயனைக் காலபாசத்தாற் கட்டியிழுக்கத் தொடங்குகையில் அம்முனிகுமாரன் சிவலிங்கத்தைத் தழுவிக்கொள்ள, யமன் சிலிங்கமுட்பட வலித்திழுக்கும்போது சிவபிரான் ஸ்ரீமந்நாராயணனைச் சிந்தைசெய்து அவனது திருவருள்பெற்று அங்குநின்று வெளிப்பட்டு யமனைக் காலலுதைத்துத் தள்ளி முனிமகனுக்கு என்றும் பதினாறு பிராயமாகவே அனேக கல்பகாலமளவும் இனிது வாழும்படி தீர்க்காயுஸ்ஸைக் கொடுத்தருளினன் என்பது வரலாறு.

/1|/ புராண பேதத்தால் இக்கதை சிறிது பேதப்படுவதுமுண்டு. பிரமனுடைய அநுக்ரஹத்தால் ம்ருகண்டு முனிவருக்குப் பிள்ளை பிறந்ததாகவும், அப்பிள்ளை ஒருநாள் வீதியில் விளையாடிக் கொண்டிருக்குமிருப்பை தாய்தந்தையர் ஆனந்தமாகக் கண்டுகொண்டிருக்குங்கால் 'இப்பிள்ளைக்கு ஆயுள் குறுகிற்று' என்று ஆகாசவாணியொன்று செவிப்பட, அதனால் அத்தாய்தந்தையர் மிக்க வருத்தங்கொண்டதாகவும், அதுகண்ட மார்கண்டேயன் 'இதற்கு நீங்கள் வருந்தவேண்டா, இவ்வாபத்தை நானே போக்கிக்கொள்கிறேன்' என்று அவர்களைத் தேற்றித் தான் சிவபூஜைசெய்யத் தொடங்கினன் என்தாகவும் சில புராணங்கள் கூறும். /1/

இங்ஙனம் சிவபிரான் மார்க்கண்டேயனுக்கு அருள் செய்தது திருமாலினருளால் தான்

பெற்ற சக்தியினாலேயென்பதும், அச்சிவபிரானுக்கு அந்தராத்மாவாய் நின்று தொழில் செய்தவன் ஸர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணனே என்பதுமாகிய உண்மை உணரத்தக்கது. சில புராணங்களில் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது பரமசிவனே மார்க்கண்டேயனுக்கு அபயமளித்ததாகக் காணப்படினும், மஹாபாரதத்தில் ஆரண்யபருவத்தில் நூற்றுத்தொண்ணூற்றிரண்டாம் அத்யாயத்தில் மார்க்கண்டேயன் தானே தருமபுத்திரரை நோக்கிச் சொல்லுமளவில் ஸ்ரீமந்நாராயணனுடைய வார்த்தைகளை அநுவதிக்குமிடத்து * பித்ருபக்தோஸி விப்ரர்ஷே! மாஞ்சைவ சரணம் கத: * என்றுள்ள ச்லோகத்தினால் இவன் ஸ்ரீமந்நாராயணனை சரணம் புகுந்தவனென்பது நன்கு விளங்கும்.

ஸ்ரீ பாகவதத்திலும் பன்னிரண்டாம் ஸ்கந்தத்தில் எட்டாமத்தியாயத்தில் *ஆராதயந் ஹ்ருஷீகேசம் ஜிக்யே ம்ருத்யும் ஸுதுர்ஜயம் * (நாராயணனை ஆராதித்து வெல்லவொண்ணாத யமனை வென்றொழிந்தான்) என்று ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று.

மார்க்கண்டேயன் இங்ஙனம் நெடுநாள் வாழ்ந்துவருகையில், மஹாப்ரளயத்தைத் தான் காணவேணுமென்று ஆசைகொண்டு எம்பெருமானைப் போற்றிப் பிரார்த்தித்து அங்ஙனம் காணும்போது, மஹாப்ரளயத்தில் திருமாலொருவனையன்றி மற்றைத் தேவரெவரையும் பிழைத்திருக்கக் காணாதவனாய் அப்பெருமானது திருவயிற்றினுள்ளே அனைவரையுங் கண்டு, முடிவில் தான் நற்கதி பெறுதற்பொருட்டுத் திருமாலையே சரணமடைய, அப்பெருமான் அவனைத் தனது திருவடிகளிற் சேர்த்துக்கொண்டருளினன் என்பதும் அறியத்தக்கது. இதைத் திருவுள்ளம்பற்றியே பன்னீராயிரப்படியில் "அன்று உய்யக் கொண்டதும்" என்பதற்கு -- "ப்ரளயதசையிலே பிழைப்பித்து பகவத்பரனாக்கி உஜ்ஜீவிப்பித்தது" என்று உரை கூறப்பட்டது.

நாராயணனருளே என்றவிடத்து ஈடு :- "நீ நெடுநாள் பச்சையிட்டு ஆச்ரயித்தாய். அவ்வாச்ரயணம் வெறுமன் போயிற்றதாக வொண்ணாது -- என்று அவனையழைத்து 'நானும் உன்னோபாதி ஒருவனை ஆச்ரயித்துக்காண் இப்பதம் பெற்றது. இனி ஊண்கொடுத்தல் உபதேசங் கொடுத்தலிறே என்று சொல்லி அவனைக் கொண்டுபோய் ஸர்வேச்வரன் பக்கலிலே காட்டிக் கொடுத்தானாயிற்று."

ஆகவே இப்படி ஸர்வேச்வரனான நாராயணனை ஒழிய மற்று எந்தத் தெய்வத்தைக் கொண்டாடுகிறீர்களென்பன பின்னடிகள்.

> விளம்புமாறுசமயமும் அவையாகியமற்றும்தன்பால் *
> அளந்துகாண்டற்கரியனாகிய ஆதிப்பிரானமரும் *
> வளங்கொள்தண்பணைசூழந்தழகாய திருக்குருகூரதனை *
> உளங்கொள்ஞானத்துவைம்மின் உம்மையுய்யக்கொண்டுபோகுறிலே.

| | |
|---|---|
| விளம்பும் | - கண்டபடி சொல்லுவது தவிரப் பொருட்பொருத்தம் சிறிதும் இல்லாதவைகளான |
| ஆறு சமயமும் | - ஆறுவகைப்பட்ட பாஹ்ய மதங்களும் |
| அவை ஆகிய | - அந்த பாஹ்ய மதங்கட்குப் பரியாயமான |
| மற்றும் | - குத்ருஷ்டி மதங்களும் |
| தன் பால் | - தன் விஷயத்திலே |
| அளந்து காண்டற்கு அரியன் ஆகிய | - எல்லைகாணவொண்ணாதவனாய் இருக்கிற |
| ஆதி பிரான் | - ஸகலஜகத் காரணபூதனான ஸர்வேச்வரன் |

| | |
|---|---|
| அமரும் | - நித்யவாஸம் பண்ணுமிடமாய் |
| வளம் கொள் தண்பணை | |
| சூழந்து அழகு ஆய | - வளம்மிக்க குளிர்ந்த நீர்நிலங்களாலே சூழப்பட்டு அழகியதான |
| திரு குருகூர் அதனை | - திருநகரியை (நீங்கள்) |
| உம்மை | - உங்களை |
| உய்யக் கொண்டு | |
| போகுறில் | - உஜ்ஜீவிப்பித்துக்கொண்டு நடக்கவேண்டியிருந்தீர்களாகில் |
| உளம் கொள் ஞானத்து | - அந்தரங்க ஜ்ஞானத்துக்குள்ளே |
| வைம்மின் | - வைத்துச் சிந்தனை செய்யுங்கள். |

* வேதபாஷ்யங்களும் குத்ருஷ்டிகளும் பண்ணுகின்ற துஸ்தர்க்கங்களால் அழிக்கவொண்ணாத ஐச்வர்யத்தையுடையனான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற திருநகரியை ஆச்ரயியுங்கோள் பிழைக்கவேண்டியிருந்தீர்களாகில் என்கிறார்.

வேதம் முதலிய சாஸ்திரங்களை ப்ரமாணமாக இசையாதவர்கள் வேத பாஹ்யர்கள் எனப்படுவர். அவற்றை ப்ரமாணமாக இசைந்துவைத்தும் அவற்றுக்குத் தவறான அர்த்ததங்களைப் பண்ணுமவர்கள் (அதாவது) எம்பெருமானொருவன் தவிர மற்ற தத்துவமொன்றுமே இல்லையென்றும், அவனுக்குக் குணமில்லை விக்ரஹமில்லை என்றும் சொல்லுமவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர். இவ்விருவகுப்பினரையும் பற்றிக் கூரத்தாழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் ஒரு ச்லோகமருளிச் செய்கிறார். அதாவது --*பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேப்யபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி நஹீக்ஷஸே தாந், ஜக்தஸ்ய காநநம்ருகைர் ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ: காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோ விசேஷ:? *என்பதாம். இதன் கருத்தாவது :- வேதபாஹ்யர்களும் வேத குத்ருஷ்டிகளுமான இருவகுப்பினரும் ஒருநாளும் பகவத் கடாக்ஷத்திற்கு இலக்காகமாட்டாமல் நசித்துப்போவர்கள். வேதத்தை அடியோடே ப்ரமாணமாக அங்கீகரியாதே. தூஷிக்கின்ற பாஹ்யர்கள் நசித்துப்போவது யுக்தம். அப்படியல்லாமல் வேதத்தை ப்ரமாணமாக அங்கீகரித்து வைதிகர்களென்று பேர்பெற்றிருக்கின்றவர்களும் நசித்துப்போவர்களென்னலாமோ என்ன; இருவகுப்பினரும் துல்ய யோகக்ஷேமர்களேயென்பது ஒரு த்ருஷ்டாந்த முகத்தாலே மூதலிக்கப்படுகிறது. விடாய் மிகுத்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு ம்ருகங்கள் புறப்பட்டன. அவற்றில் ஒரு ம்ருகமானது தடாகத்தில் புகாதே கானலைக்கண்டு தண்ணீர்ப்பெருக்காக மயங்கி ஓடிக்கொண்டேயிருக்கையில் வழியிடையிலே நேர்பட்ட புலி முதலிய கொடிய விலங்குளினால் அடித்துத் தின்னப்பட்டதாயிற்று. இது இப்படியாக, மற்றொரு மிருகமானது விடாய்தீரத் தடாகத்திலேயே சென்று சேர்ந்தது. ஆனால் அடைவே இழியவேண்டிய துறையிலே யிழியாமல் துறைதப்பி யிழியவே அங்குக் கிடந்தவொரு கொடிய ஜலஜந்துவாலே அது பக்ஷிக்கப்பட்டொழிந்தது. ஆக இரண்டு மிருகங்களும் தடாகப்ரவேச -- அப்ரவேசங்களாலே சிறிது வாசி பெற்றிருந்தாலும் விநாசத்திலே வாசி பெற்றனவில்லையே. அதுபோலவே குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேதப்ராமாண்ய அங்கீகார--அநங்கீகாரங்களாலே சிறிது வாசி பெற்றிருந்தாலும் விநாசத்திலே வாசியற்றவர்களேயாவர் என்றதாயிற்று. கானலிலே மயங்கியொழிந்த ம்ருகத்தின் ஸ்தானத்தில் பாஹ்யர்கள். தடாகத்திலே யிழிந்து துறைதப்பியொழிந்த ம்ருகத்தின் ஸ்தானத்திலே குத்ருஷ்டிகள் என்றுணர்க.

**விளம்பும் ஆறுசமயமும்** = சாக்ய, உலுக்ய, அக்ஷபாத, க்ஷபண, கபில, பதஞ்சலி மதங்கள் எனப்படும் ஆறும் பாஹ்ய ஸமயங்களாம். சாக்யர் =பௌத்தர். உலூக்யர்

=சார்வாகர். அக்ஷபாதரென்று =கௌதமரைச் சொல்லி நையாயிக வைசேஷிகர்களை நினைக்கிறது. க்ஷபணர் = ஜைநர்.

**அவையாகிய மற்றும்** = மற்றும் அவற்றோடொத்த குத்ருஷ்டிகளும் என்றபடி. "அவையாகியும்" என்பது பன்னீராயிரப்படியுரைக்கு மாத்திரம் பாடம்.

**மற்றும்** என்பதற்கே குத்ருஷ்டிவர்க்கமெனப் பொருள்கொண்டு, அவையாகியும் என்பதற்கு 'ஸபையாகத் திரண்டாலும்' என்று பொருள் கூறினர் பன்னீராயிரவுரைக்காரர். அவை = ஸபை. பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் பெருந்திரளாகக் கூடினாலும் பரிச்சேதித்து அறியமுடியாதவன் எம்பெருமான் என்றபடி.

ஆறுசமயங்களுக்கு **விளம்பும்** என்று அடைமொழி கொடுத்தது -- அர்த்தமில்லாத வெறும் சொற்களையே பிதற்றுகிறவர்களென்று காட்டினபடி. ஆக, பாஹ்யர்களாலும் குத்ருஷ்டிகளாலும் சலிப்பிக்கவொண்ணாத ஸ்வரூபரூப குணவிபூதிகளையுடைய ஸர்வேச்வரன் எழுந்தருளி யிருக்குமிடமாய், வளம் மிக்க நீர்நிலங்களாலே சூழப்பட்டு அழகியதான திருநகரியை, **உளங்கொள் ஞானத்து வைம்மின்** -- மாநஸஜ்ஞானத்துக்கு விஷயமாக்குங்கள் என்றபடி. இது யாரைநோக்கி யுரைக்கிறதென்னில்; **உம்மை உய்யக்கொண்டு போகுறில்** = உஜ்ஜீவிக்க விருப்பமுடையீராகில்.
போக + உறில் = போகுறில் = தொகுத்தல்.

> உறுவதாவதெத்தேவும் எவ்வுலகங்களும்மற்றும்தன்பால் *
> மறுவில்மூர்த்தியோடொத்து இத்தனையும்நின்றவண்ணம்நிற்கவே*
> செறுவில்செந்நெல்கரும்பொடோங்கு திருக்குருகூரதனுள் *
> குறியமாணுருவாகிய நீள்குடக்கூத்தனுக்காட்செய்வதே.

| | |
|---|---|
| எத்தேவும் | - எல்லாத் தேவதைகளும் |
| எ உலகங்களும் | - எல்லாவுலகங்களும் |
| மற்றும் | - மற்றுமுண்டான சேதநா சேதனங்களுமாகிய |
| இத்தனையும் | - இவையடங்கலும் |
| தன் பால் | - தன்னுடையதான |
| மறு இல் மூர்த்தியோடு ஒத்து | - நிஷ்கலங்கமான அஸாதாரண விக்ரஹம் போன்று (ஸகலவிதத்தாலும் விதேயங்களாகி யென்றபடி) |
| நின்ற வண்ணம் நிற்க | - குறையற நிற்குமிருப்பிலே |
| செறுவில் | - விளை நிலங்களில் |
| செந்நெல் | - செந்நெற்பயிர்களும் |
| கரும்பொடு | - கருப்பஞ்சோலைகளும் |
| ஓங்கு | - வளரும்படியான |
| திரு குருகூர் அதனுள் | - திரு நகரியிலே |
| குறிய மாண் உரு ஆகிய | - வாமநப்ரஹ்மசாரி வேஷமெடுத்தவனும் |
| நீள் குடக் கூத்தனுக்கு | - (க்ருஷ்ணனாய்ப்) பெரிய குடக் கூத்தாடினவனுமான பெருமானுக்கு |
| ஆள் செய்வதே | - அடிமை செய்வதே |
| உறுவது ஆவது | - உற்றதாம். |

* தன் ஐச்வர்யத்தில் ஒன்றும் குறையாமல் திருநகரியில் வந்து நின்றருளின பொலிந்து

நின்ற பிரானுக்கு அடிமைசெய்கைதானே ஸ்வரூபாநுரூபமென்கிறார். பாட்டினடியிலுள்ள **உறுவதாவது** என்பதை, முடிவிலுள்ள **ஆட்செய்வதே** என்பதனோடு கூட்டுக. ஆட்செய்வதே உறுவதாவது என்றபடி.

**எத்தேவும் எவ்வுலகங்களும் மற்றும் இத்தனையும் தன்பால் மறுவில் மூர்த்தியோடொத்து** இத்யாதி. இந்திரன் சந்திரன் குபேரன் என்று சொல்லப்படுகிற ஸகல தேவதா வர்க்கமும், ஸமஸ்த லோகங்களும், மற்றுமுண்டான சேதநாசேதநவர்க்கமுமான இவை யித்தனையும் தன்னுடைய அஸாதாரண விக்ரஹம்போலே தனக்கு விதேயமாயிருக்கும்படியாகப் பெற்ற எம்பெருமான் திருக்குருகூரிலே நின்றருளுகிறானாகையாலே அவனுக்கு ஆட்செய்வதே உறுவது என்றபடி.

**மறுவின்மூர்த்தி** யென்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் கூறுவர். மறு என்று ஸ்ரீவத்ஸத்திற்கும் பெயராகையாலே அதமையுடைத்தான திருமேனி. (அல்லது) மறு என்று அவத்யமாய், அஃதில்லாத (ஹேயப்ரத்யநீகமான) திருமேனியென்னுதல்.

எவ்வுலகங்களும் மற்றும் தன்னுடைய மூர்த்தியோடொத்திருக்கையாவது என்னென்னில்; சரீரத்தினுடைய லக்ஷணம் இன்னதென்று அறிந்தால் இது அறிந்ததாகும். *யஸ்ய சேதநஸ்ய யத் த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்த்தே நியந்தும் தாரயிதுஞ்ச சக்யம் தச்சேஷதைக ஸ்வரூபஞ்ச, தத் தஸ்ய சரீரம்.*என்பது சரீர லக்ஷணம். ஆத்மாவுக்கு ஸகலப்ரகாரங்களாலும் நியாம்யமாய் தார்யமாய் சேஷப்பட்டிருக்கையே சரீரத்வமாதலால் ஸகலதேவதைகளும் எம்பெருமானுக்கு இங்ஙனேயிருக்கும்படியைச் சொன்னவாறு.

செறு = விளைநிலம்.

**குடக்கூத்தன்** =அந்தணர்க்குச் செல்வம் விஞ்சினால் யாகஞ்செய்வது போல இடையர்க்குச் செல்வம் விஞ்சினால் அதனாலுண்டாகுஞ் செருக்குக்குப் போக்குவீடாக அவர்களாடுவதொரு கூத்து குடக்கூத்தெனப்படும். தலையிலே அடுக்குக்குடமிருக்க இரு தோள்களிலும் இருகுடங்களிருக்க இருகையிலும் குடங்களை யேந்தி ஆகாசத்திலே எறிந்து ஆடுவதொரு கூத்து இது.

ஆட்செய்தாழிப்பிரானைச் சேர்ந்தவன் வண்குருகூர்நகரான் *
நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன் மாறன்சடகோபன் *
வேட்கையால்சொன்னபாடல் ஆயிரத்துளிப்பத்தும்வல்லார் *
மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றதுகையதுவே.

| | |
|---|---|
| ஆள் செய்து | - (உபதேச முகத்தாலே ஸம்ஸாரிகளைத் திருத்திப் பணிகொள்ளுகையாகிற) கைங்கரியத்தைப் பண்ணி |
| ஆழி பிரானைச் சேர்ந்தவன் | - ஆழியங்கையனான பெருமானை அடைந்தவரும் |
| வண் குருகூர் நகரான் | - திருநகரிக்குத் தலைவனும் |
| நாள் கமழ் மகிழ் மாலை மார்பினன் | - பரிமளம் மாறாத மகிழமாலையைத் திருமார்பிலே அணிந்தவருமான |
| மாறன் சடகோபன் | - ஆழ்வார் |
| வேட்கையால் | - ஆதரத்தோடு |
| சொன்ன | - அருளிச்செய்ததான |
| பாடல் ஆயிரத்துள் | - ஆயிரம் பாட்டினுள்ளே |
| இ பத்தும் வல்லார் | - இப்பதிகத்தை ஓதவல்லவர்களுக்கு |

| | |
|---|---|
| மீட்சியின்றி | - மீண்டும் திரும்புதல் இல்லாத |
| வைகுந்தம் மா நகர் மற்றது | - ஸ்ரீ வைகுண்டமாநகரமாகிய அவ்விடம் |
| கையது | - கரஸ்தம். |

* இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டும் பாசுரம் இது. (ஆட்செய்து ஆழிப்பிரானைச் சேர்ந்தவன்) ஆட்செய்கையாவது கைங்கரியம் பண்ணுதல் இது மாநஸிகமென்றும் வாசிகமென்றும் காயிகமென்றும் மூவகைப்பட்டிருக்கும். இங்கு வாசிக கைங்கரியம் கொள்ளத்தகும். செவிக்கினிய செஞ்சசொற்களைப் பாடுவதே வாசிக கைங்கரியமாகும். எம்பெருமானார் கையுந்திருவாழியுமான அழகைக் காட்டித் தம்மை ஆட்படுத்திக்கொண்டானெனன்பது தோன்ற ஆழிப்பிரானை என்றார்.

முதலடிக்கு ஈட்டு ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யங்களாயிருக்கையாலே அவை ஈண்டுக் குறிப்பிடப்பெறுகின்றன :- "அடிமைதான் த்ரிவிதம் -- மாநஸ வாசிக காயிகங்கள். இவற்றில் மாநஸ காயிகங்களுக்கு ஆளல்லர்; என்றியவென்னில், *காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்* என்கையாலே. இனி வாசிகமொன்றுமேயானால், வாசிகமாகத் திருவாய்மொழி பாடி அடிமை செய்தாரென்கிறதோ வென்னில்; அன்று; அப்படியாமன்று இப்பாசுரம் * முனியே நான்முகனிலேலேயாகவேணும். இல்லையாகில் இவர் வாசிகமாக அடிமைசெய்த *புகழுநல்லொருவனிலேயாகப் பெறில் முக்ய்ம். ஆனால், தேவதாந்தரபரத்வ நிரஸநபூர்வமாக ஸர்வேச்வரனுடைய பரத்வத்தை அருளிச்செய்கயாலே ஆனாலோ வென்னில்; அதுவாகில் முதல் திருவாய்மொழியிலே யாகவமையும். பரத்வநிர்ணயத்திலே பரோபதேசமு மாகையாலே ஆனாலோவென்னில், அதுவாகில் *திண்ணன்வீட்டிலேயாதல்* அணைவதரவணையிலே யாதலாகவமையும். ஆனால் அர்ச்சாவதாரத்திலே பரத்வமருளிச் செய்கையாலே யானாலோவென்னில்; அதுவுமொண்ணாது. அது *செய்யதாமரைக் கண்ணனிலேயாகவமையும். பரோபதேசம் பண்ணுகையாலே சொல்லிற்றானாலோவென்னில், அதுவுமொண்ணாது; *வீடுமின் முற்றவும் தொடங்கிப் பலவிடங்களிலும் பரோபதேசம் பண்ணினார்; ஆனால் ஏதாவதென்னில்; இவ்வொன்றுந்தேவிலே *பரன் திறமன்றிப் பல்லுலகீர் தெய்வம் மற்றில்லை பேசுமினே *என்று பொலிந்து நின்ற பிரானே ஸர்வஸ்மாத்பரனென்று இவரருளிச் செய்யக் கேட்டு *கபாலநன்மோக்கத்துக் கண்டு கொண்மின்*என்னக் கண்டு ஜகத்தாகத் திருந்தி ஸ்ரீவைஷ்ணவர்களாயிற்று. இவர்தாம் அவர்களுக்கு மங்களாசாஸநம் பண்ணும்படியிறே அவர்கள் தாம் திருந்தினபடி. *பொலிக பொலிக என்று இதுக்கென்னவொரு திருவாய்மொழி நேருகிறாரிறே. ஸர்வேச்வரன் அவதரித்துத் திருத்தப் பார்த்தவிடத்தும் திருந்தாத ஸம்ஸாரத்திலே இவர் திருத்தத் திருந்தினபடி. இனி இவர்க்குத் தத்வநிர்ணயம் பண்ணவேண்டாதபடி *இடங்கொள் சமயத்தையெல்லாமெடுத்துக் களைவனபோலே தடங்கடற்பள்ளிப் பெருமான் தன்னுடைப் பூதங்களேயாம்படி திருத்துகையாலே **ஆட்செய்தாழிப்பிரானைச்சேர்ந்தவன்** என்கிறார்."

இந்த நன்மைக்கு அடி நல்லார்நவில் குருகூரிலே பிறப்பு, என்பது தோன்ற வண்குருகூர்நகரான் என்கிறார்.

**நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன்** =ஆழ்வார் தாம் வகுளமாலையை அணியாகக் கொண்டவராதலால் வடமொழியில் 'வகுளாபரணர்', 'வகுளபூஷணர்' என்றும், தென்மொழியில் 'மகிழ்மாலைமார்பினர்' என்றும் வழங்கப்படுவர். ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் யதிராஜஸப்ததியில் *யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ வகுலாமோத வாஸிதம், ச்ருதீநாம் விச்ரமாயாலம் சடாரிம் தமுபாஸ்மஹே.* என்றருளிச்செய்த ச்லோகம் இங்கு ஸ்மரிக்கத் தக்கது. ஆழ்வார் அணிந்து கொண்டிருக்கும் வகுளமாலையின் நறுமணம் திருவாய்மொழியிலும் வீசிக்கிடப்பதாக

அருளிச்செய்கிறார். இத்தகைய நறுமணம் வடமொழி வேதத்திற்கு இல்லாமையாலே அதற்கொரு குறையுண்டு என்பதையும் காட்டியருளினார்.

**வேட்கையால் சொன்னபாடல்** = உலகத்திலே கவி சொல்லுவார் பலருண்டு. அவர்கள் பெரும்பாலும் தம்தம் கவித்திறம் காட்டுதற்கே பாடல்கள் பாடுவர். ஆழ்வார் அங்ஙனமின்றி பக்தி பலாத்காரத்தாலே பரவசமாகத் திருவாய்மொழி பணித்தாரென்பது அறியத்தக்கது. ஆசார்யஹ்ருதயத்தில் -- "நீர்பால் நெய்யமுதாய் நிரம்பின ஏரி நெளிக்குமாபோலே பரபக்தியாதிமயஜ்ஞாநாம்ருதாப்தி நிமிகிற வாய்கரைமிடைந்து மொழிபட்டு அவாவிலந்தாதியென்று பேர்பெற்றது." என்ற சூர்ணிகை இங்கு அநுஸந்தேயம்.

"வைகுந்தமாநகர்மற்றது" என்ற விடத்தில் மற்று என்பது அசைச்சொல்லாய் வைகுந்தமாநகராகிய அவ்விடம் என்று பொருள்படும். அன்றியே, வைகுந்தமாநகராகிய நித்ய விபூதியும் மற்றதாகிய லீலாவிபூதியும் என்றும் பொருள்கொள்ளலாம். உபய விபூதி ஸாம்ராஜ்யமுண்டாகுமென்று பலன் சொல்லிற்றாயிற்று.

--------------------

## ஐந்தாம்பத்து -- எட்டாந் திருவாய்மொழி -- ஆராவமுதே.

**உரையவதாரிகை** :- கீழ்த் திருவாய்மொழியிலே வானமாமலை எம்பெருமான் திருவடிகளிலே வேரற்ற மரம்போலே விழுந்து மிகப்பெரிய ஆர்த்தியோடே சரணம் புகச்செய்தேயும் அப்பெருமான் முகங்காட்டிற்றிலன். இன்னார்க்கு இன்னவிடத்திலே முகங்காட்டுவது என்றொரு நினைப்பு உண்டே எம்பெருமானுக்கு. அதனாலே இவர்க்குத் திருக்குடந்தையிலே முகங்காட்டுவதாக அவன் நினைப்பிட்டிருக்கவுங் கூடுமே. ஆழ்வார் அப்படியே கருதினார். நமக்குத் திருக்குடந்தையிலே காட்சி தந்தருள்வதாக எம்பெருமான் ஸங்கல்பித்திருக்கக் கூடுமென்று எண்ணினார். எண்ணி, 'அங்குச் சென்று புகவே நம் அபேக்ஷிதம் தலைக்கட்டும்; குறைகளெல்லாம் தீரும்' என்று கனக்கப் பாரித்துக்கொண்டு திருக்குடந்தையிலே சென்று புகுந்தார். சித்திரக்கூட மலைச்சாரலிலே வந்து சேர்ந்த பரதாழ்வான் தான் நினைத்தபடியான பரிமாற்றம் ஒன்றும் பெறாதாப்போலே; ஆழ்வாரும் புக்கவிடதட்தில் திருக்கண்களை அலர விழித்துக் குளிரநோக்கியருளுதல் திருப்பவளத்தைத் திறந்து ஒரு வார்த்தையருளிச் செய்தல் அணைத்தல் முதலானவற்றிலே ஒன்றுஞ் செய்யக் கண்டிலர். அக்ரூரன் கண்ணபிரானிடத்து வரச்செய்தே *மாம் அக்ரூரேதி வக்ஷ்யதி* என்று கனக்கப் பாரித்துக்கொண்டு மனோரதித்தபடியே பெற்றானென்று கேட்டிருந்தோம். அங்ஙனே, ஒன்றும் தாம் பெறாமையாலே மிக வருந்தி, ஸ்தநந்தய ப்ரஜையானது தாய்ப்பக்கலிலே தளர்ந்து கிடந்து கூப்பிட்டு இன்னும் எத்தனை திருவாசல் தட்டித்திரியக் கடவேன்! என்னு மார்த்தியோடே தலைக்கட்டுகிறார்.

> ஆராவமுதேயடியேனுடலம் நின்பாலன்பாயே *
> நீராயலைந்துகரையவுருக்கின்ற நெடுமாலே! *
> சீரார்செந்நெல்கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை *
> ஏரார்கோலம்திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே!

ஆரா அமுதே - எவ்வளவு அநுபவித்தாலும் திருப்திபிறவாத அமுதமாகிய
நின் பால் - உன் திறத்தில்
அன்பு ஆய் ஏ - அன்புதானே வடிவெடுத்ததாகி
நீர் ஆய் அலைந்து - நீர்ப்பண்டமாக உருகி வியாகுலப்பட்டு

| | |
|---|---|
| கரைய | - கரையும்படியாக |
| உருக்குகின்ற நெடுமாலே | - உருகப்பண்ணாநிற்கிற ஸர்வேச்வரனே! |
| சீர் ஆர் செந் நெல் | - சீர்மைமிக்க செந்நெற் பயிர்கள் |
| எம்மானே | - எம்பெருமானே! |
| அடியேன் உடலம் | - என்னுடைய சரீரமானது |
| கவரி வீசும் | - சாமரம்போல் வீசப்பெற்று |
| செழு நீர் | - செழுமை தங்கிய தீர்த்தங்களையுடைத்தான |
| திரு குடந்தை | - திருக்குடந்தையிலே |
| ஏர் ஆர் கோலம் திகழ் | - அழகுபொருந்திய திருமேனி விளங்க |
| கிடந்தாய் | - சாய்ந்தருளினாய், (அவ்வழகை) |
| கண்டேன் | - ஸேவிக்கப் பெற்றேன். |

* இத்திருவாய்மொழியிலே நம் பூருவர்கள் போரவும் ஈடுபட்டிருப்பார்களாயிற்று. இங்கு ஈட்டில் நம்பிள்ளைஅருளிச்செய்வது பாரீர்; -- "உத்தர பூமியிலே லோக ஸாரங்க மஹாமுனிகள் வர்த்தியா நிற்க, இங்குத்தையானொருவன் அங்கேறச் செல்ல, 'பிள்ளாய்! தக்ஷிணபூமியில் விசேஷமென்?' என்று கேட்க, 'திருவாய்மொழி யென்றொரு பிரபந்தமவதரித்து சிஷ்டர்கள் பரிக்ரஹித்துப் போரக் கொண்டாடிக்கொடு போராநின்றார்கள்' என்ன, 'அதிலே உனக்குப் போவதொரு சந்தை சொல்லிக் காணாய்' என்ன, "ஆராவமுதே * என்கிற வித்தனையும் எனக்குப் போம்' என்ன 'நாராயணாதி நாமங்கள் கிடக்க இங்ஙனேயொரு நிர்தேச முண்டாவதே! இச்சொல் நடையாடுகிற தேசத்தேறப் போவோம்' என்று அப்போதே புறப்பட்டுப் போந்தார்."

**அடியேனுடலம் நின்பாலன்பாயே** -- ஆழ்வார் இப்போது அடியேனென்கிறது தம்முடைய ஸ்வரூபரூப முள்ளபடியை நினைத்துச் சொல்லுகிறதன்று; **ஆராவமுதே** என்று பேசி யநுபவித்த போக்யதைக்குத் தோற்று அடிமைபுக்கு அடியேனென்கிறார். (**உடலம் அன்பாய்**) அசேதநமான சரீரமானது பகவத் விஷயத்திலே அன்புதானே ஒருவடிவு கொண்டாற்போலே யாயிற்று. அன்பு ஆத்மாவினுடைய தருமமே யல்லது சரீரத்தினுடைய தருமமன்று. அப்படியிருந்தும் விஷயவைலக்ஷண்யமானது அசேதநமான உடலும் ஆத்மதர்மம் கொள்ளும்படி செய்ததாயிற்று. ஆசார்ய ஹ்ருதயத்தில் "**உடலம் ஆத்மதர்மம் கொள்ள**" என்றருளிச் செய்தது இப்பாசுரம் நோக்கியே காணும்.

**நீராய் அலைந்து** -- உடலம் அன்பாகி, அன்புதான் நீராய்க்கொண்டு அலையா நின்றது. இங்ஙனே கரைந்து உருகும்படி செய்பவன் எம்பெருமானே யாயிற்று. அவனுடைய நிலைமைதான் என்னென்னில், (**நெடுமாலே**) ஆழ்வாருக்கு எம்பெருமானளவிலே யுண்டான வியாமோஹம் அற்பமென்னும்படியாய் எம்பெருமானுக்கு ஆழ்வாரளவிலே யுண்டான வியாமோஹம் நெடிதாயிருந்தது. 'பெரிய பித்துக்கொள்ளி' என்னும்படியானான் அவன்.

ஆழ்வார் இங்ஙனே உருகிப் பேசும்படி எந்த திருவுருவத்தைக் கண்டாரென்னில், அது சொல்லுகிறது பின்னடிகளில். மிகவும் கனத்து அசைந்து வருகிற செந்நெற் கதிர்கள் சாமரை வீசுமாபோலேவீச; *செல்வம்மல்கு தென்திருக்குடந்தையில் திருமேனியழகு நிறம் பெறும்படி திருக்கண்வளர்ந்தருளும் பெருமானே! உனது கிடையழகு கண்டு இப்பாடுபடுகின்றே னென்றாராயிற்று.

(**சீரார் செந்நெல்**) "செந்நெல்லுக்குச் சீர்மையாவது -- ஆராவமுதாழ்வார்க்கு அமுதுபடியாகிற சீர்மை" என்பர் நம்பிள்ளை. அர்ச்சாவதாரத்திலே எம்பெருமானுடைய திருப்பவளத்துக்குப் பாங்காக நிவேதனமாகப் பெறுகிற சீர்மை நெற்பயிர்களுக்காம்.

(**ஏரார்கோலம் திகழ**) -- "நாட்டார் உலாவித் திரியும்போது அவயவங்களிலுண்டான பொல்லாங்குகள் மறைந்து ஒன்று போலேயிருக்கும். ஓரிடத்திலே இருத்தல் கிடத்தல் செய்தவாறே வைரூப்யம் தோற்றிக் கண்கொண்டு பார்க்க வொண்ணாதபடி யிருப்பார்கள்; இங்கு அங்ஙனன்றிக்கே கிடந்த கிடைக்கு ஆலத்தி வழிக்க வேண்டும்படியிருக்கை. இவனுணரில் செய்வதென்! என்று வயிறு பிடிக்க வேண்டும்படியிருக்கை" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

எம்மானே! என்வெள்ளைமூர்த்தி என்னையாள்வானே!
எம்மாவுருவும்வேண்டுமாற்றால் ஆவாயெழிலேறே!
செம்மாகமலம்செழுநீர்மிசைக்கண்மலரும் திருக்குடந்தை *
அம்மாமலர்க்கண்வளர்கின்றானே என்னான்செய்கேனே?

| | |
|---|---|
| எம்மானே | - எல்லாவிதத்திலும் மஹானானவனே! |
| என் வெள்ளை மூர்த்தி | - என்னை ஈடு படுத்திக்கொண்ட பரிசுத்தஸ்வரூபனே! |
| என்னை ஆள்வானே | - என்னை அடிமை கொள்பவனே! |
| வேண்டும் ஆற்றால் | - திருவுள்ளமான படியே |
| எம்மா உருவும் ஆவாய் | - எப்படிப்பட்ட அவதார விக்ரஹங்களையும் பரிக்ரஹிப்பவனே! |
| எழில் ஏறே | - அழகிற் சிறந்தவனே! |
| மா செம் கமலம் | - பெரிய செந்தாமரைகள் |
| செழு நீர் மிசை | - அழகிய நீரினிடத்து |
| கண் | - கண்டவிடமெங்கும் |
| மலரும் | - மலரப்பெற்ற |
| திரு குடந்தை | - திருக்குடந்தையிலே |
| அ மா மலர் | - அப்படிப்பட்ட சிறந்த மலர்போன்ற |
| கண் வளர்கின்றானே | - திருக்கண்கள் துயில்பவனே! |
| நான் என் செய்கேன் | - நான் என்ன பண்ணுவேன்? |

(இவ்வழகு கண்டு என்னால் தரிக்கப்போகிறதில்லையே)

* கீழ்ப்பாட்டில் "கண்டேனெம்மானே!" என்ற ஆழ்வாருடைய கருத்து -- பிரானே! உன்னை உலகத்தார் காண்கிற ரீதியிலே நானும் காணுமித்தனையேயோ? எனக்காக எழுந்திருத்தல், இருத்தல், உலாவுதல், குசலப்ரச்னம் பண்ணியருளுதல், அணைத்தல் செய்தருள வேண்டாவோ? என்று கேட்பதாம். அங்ஙனே கருத்துத் தொனிக்கக் கூப்பிடச் செய்தேயும் ஆராவமுதன் அசையாதேயிருக்க, மீண்டுமொருபடி கூப்பிடுகிறார்.

எனக்கு ஸ்வாமியானவனே! அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநமான திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையவனே! அப்படிப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்தின் அழகைக் காட்டி என்னை ஆட்படுத்திக் கொண்டவனே!, என்னைப்போன்ற ஸம்ஸாரிகள் நல்வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு பலவகைப்பட்ட சரீரங்களைப் பரிக்ரஹிக்குமாபோலே, நிர்ஹேதுக கருணையினாலும் திவ்யஸங்கல்பத்தாலும் வேண்டினபடியெல்லாம் அவதார ரூபங்களைப் பரிக்ரஹித்துப் பேரருள் செய்பவனே!, இங்ஙனே உபகாரமே வடிவாயிருக்கின்ற நீ இன்னமும் எனக்குச் செய்யவேண்டிய உபகாரங்களைச் செய்யத் தவறலாமோ? ஒன்றும் செய்யவேண்டா; திருக்கண்களைத் திறந்து கடாக்ஷித்தருளுமித்தனை போராதோ அடியேனுக்கு. இத் திருக்கண்களுக்குப் போலியான கமலங்களெல்லாம் நீரிலே மலர்ந்திருக்கும்படியைக் காணாநின்ற நான் *வன் காற்றறைய ஒருங்கே மறிந்து கிடந்தலர்ந்த மென்கால்

கமலத்தடம்போற் பொலிந்த எம்பிரான் தடங்கண்கள் இப்படி மலரவேண்டாவோ என்று துடிக்கின்றேனே, இந்தத் துடிப்பைத் தவிர்க்கவேண்டாவோ வென்கிறார்.

**என்வெள்ளைமூர்த்தி** -- தன்னுடைய ஸ்வரூபஸ்வபாவங்களில் ஒன்றுதப்பாமல் அனைத்தையும் வெட்டவெளிச்சமாக எனக்குக் காட்டித் தந்தவனே! என்றபடி.

**என்னையாள்வானே!** -- *அஞ்சிறைய மடநாரை தொடங்கிப் பல பல பதிகங்களிலே யுண்டான ஆற்றாமைகளைப்போக்கி முகங்காட்டி அடிமை கொண்டவனே! என்றவாறு.

**வேண்டுமாற்றால் எம்மாவுருவும் ஆவாய்** -- *இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ: * என்கிறபடியே திருவுள்ளமானபடியெல்லாம் திருமேனிகளைப் பரிக்ரஹித்து ஸாது பரித்ராணம் பண்ணுமவனே! என்றபடி. (**எழிலேறே**) நம்மைப்போலே கருமமடியாகப் பிறக்கையன்றிக்கே கருணையடியாகப் பிறக்கையாலே நிறக்கேடுதானில்லாமே ஒளிமல்கப் பெறுமாயிற்று.

**செம்மாகமலம் செழுநீர்மிசை கண்மலரும்** -- திருக்குடந்தை வயல்களிலே தாமரை மலரக் காண்கிறேன்; எம்பெருமானுடைய திருக்கண்தாமரை அந்தோ! மலரக் காண்கின்றிலேனே! என்று தளர்கின்றார்.

**என்நான் செய்கேனே?** -- திருக்கண்கள் மலர்ந்தாலன்றித் தரிக்ககில்லாத அடியேன் இப்படியே பட்டினிகிடந்து போகவேண்டியதுதானோ வென்கிறார்.

என்னான்செய்கேன்? யாரேகளைகண் என்னையென்செய்கின்றாய்? *
உன்னாலல்லால்யாவராலும் ஒன்றும்குறைவேண்டேன் *
கன்னார்மதிள்சூழ்குடந்தைக்கிடந்தாய் அடியேனருவாணாள் *
சென்னாளெந்நாளந்நாள் உனதாள்பிடித்தேசெலக்காணே.

| | |
|---|---|
| நான் என் செய்கேன் | - அடியேன் என்ன செய்வேன் ! |
| களைகண் யாரே | - ரக்ஷகராவார் யாவர்? |
| என்னை என் செய்கின்றாய் | - என்னை என்ன செய்வதாக இருக்கின்றாய்? |
| உன்னால் அல்லால் | - உன்னைத் தவிர்த்து |
| யாவராலும் | - வேறு ஒருவிதமான உபாயத்தாலும் |
| குறை ஒன்றும் வேண்டேன் | - சிறிதும் அபேக்ஷையுடையேனல்லேன், |
| கன் ஆர் மதில் சூழ் குடந்தை கிடந்தாய் | - வேலைப்பாடு பொருந்திய மதிள் சூழ்ந்த திருக்குடந்தையிலே சயனித்தருள்பவனே! |
| அடியேன் | - அடியேனுடைய |
| அரு | - ஆத்மாவானது |
| வாழ் நாள் | - வாழும் காலத்தில் |
| செல் நாள் எ | - கழிகின்ற நாள்கள் எத்தனை நாளோ |
| அ நாள் | - அந்த நாள்களெல்லாம் |
| உன தாள் பிடி | - உனது திருவடிகளைப் பற்றிக்கொண்டே |
| செல | - நடக்கும்படி |
| காண் | - கடாக்ஷித்தருளவேணும். |

* இப்படி துடித்துக் கூப்பிட்டவிடத்திலும் குளிர நோக்குதல் குசல ப்ரச்னம் பண்ணுதல் ஒன்றும் செய்யாமலே, 'நாம் பேற்றுக்கு ஏதேனும் உபாயம் அனுட்டிக்கவேணும் என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றியிருக்கிறான் போலும்' என்று கொண்டு பிரானே! நான்

என் காரியம் செய்கையென்று ஒன்றுண்டோ? நீயே செய்து தலைக்கட்டித்தரவேணும்' என்கிறார்.

முதலடியில் மூன்றுவகையான கேள்விகள் அடங்கியிருக்கின்றன. என் தலையிலே ஏதேனும் காரியம் ஏறிடுவதாக எண்ணியிருக்கிறாயோ? சிலரை ரக்ஷகராகத் தேடியோடும்படி செய்ய நினைத்திருக்கிறாயோ? நீயே செய்வதாக நினைத்திருக்கிறாயோ? என்று கேள்விகள். உன் திருவடிகளைப் பெறுகைக்கு என்னால் செய்யலாவதில்லாமையாலே என் தலையிலே ஒன்று ஏறிடவேண்டா; நீ உன்னைத் தரப்பார்த்தாயோ? உபாயாந்தரங்களைக்காட்டி அகற்றப் பார்த்தாயோ "என்னான் செய்கேன்" என்பதனால் 'நான் என்ன செய்வது?' என்று கேட்கிறாரல்லர். என்னாலே ஒன்றும் செய்யமுடியாதே என்று கையை விரித்துச் சொல்லுகிறபடி.

ஸ்ரீவசனபூஷணத்தில் "என்னான் செய்கேனென்கிற விடத்திலே இம்மூன்றுமுண்டு" என்ற ஸூக்தி இங்கே அநுஸந்தேயம். அவ்விடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின் :- "எம்பெருமான் தம்முடைய ஆர்த்திகண்டு இரங்கக் காணாமையாலே தன்னைப் பெறுமிடத்தில் சில ஸாதநாநுஷ்டானம் பண்ணவேணுமென்று இருந்தானாகக் கொண்டு உபாயாந்தரானுஷ்டானத்துக்கு யோக்யதையில்லாதபடி அஜ்ஞனான நான் என் செய்கேன்? ஜ்ஞானம் தந்தோமே யென்னில்; நீ தந்த ஜ்ஞானத்தாலே ஸ்வரூப பாரதந்த்ரியத்தை யுணர்ந்து ஸாதநாநுஷ்டானம் அப்ராப்தம் என்றிருக்கிற நான் என் செய்கேன்? ஸ்வரூபத்துக்குச் சேராதாகிலும் உன்னைப் பெறலாமாகில் அதுதன்னை யனுஷ்டிக்கலாமிறே ஜ்ஞான மாத்ரத்தைத் தந்தாயாகில்; பக்திரூபாபந்ந ஜ்ஞானத்தைத் தருகையாலே ஒன்றையும் அடைவுபட அநுஷ்டிக்க க்ஷமனல்லாதபடி பக்தி பரவசனான நான் என் செய்கேன் என்று இம்மூன்றும் ஆழ்வார்க்கு விவக்ஷிதம்."

**உன்னாலல்லால் யாவராலு மொன்றுங் குறை வேண்டேன்** -- உன்னுடைய க்ருபையாலே உன் திருவடிகளைப் பெறுகையொழிய வேறொருபாயத்தால் பெறுவதானுலும் வேண்டா என்றபடி. உபேயமும் உபாயமும் ஒன்றேயாயிருக்கவேணு மென்கை. 'யாவராலும்' என்று உயர்திணையிருந்தாலும் அஃறிணையாகவே பொருள் விவக்ஷிதம். எந்தக்ரியாகலபமும் உபாயமாக வேண்டிற்றில்லை என்றபடி. இங்யே ஈடு :- "யாவையாலு மென்னாதே யாவராலும் என்கிறது -- உபாயபாவம் ஒருசேதநன் தலையிலே யென்றிருக்கையாலே" என்று.

(**கன்னார்மதில் இத்யாதி**) பரிவுடையார்க்கு அஞ்சவேண்டாதபடி திடமான மதிள் சூழ்ந்த திருக்குடந்தையிலே திருக்கண் வளர்ந்தருள்பவனே! என்னுடைய ஆத்மவஸ்து உள்ளவளவும் உன் திருவடிகளை அவலம்பித்துக்கொண்டே நடக்கும்படி பார்த்தருளவேணும்.

**அடியேன் அரு** -- அரூபியான வஸ்துவுக்கு அருவென்று பெயர். உருவமுடைத்தல்லாமையாலே ஆத்மாவை அரு வென்கிறது. 'அடியேனுடைய ஆத்மவஸ்து' என்றால் அடியேனிற் காட்டிலும் வேறான ஆத்மவஸ்து இருப்பதாகத் தோற்றுகின்றதே, இதுபொருந்துமோ? என்று சங்கிக்கவேண்டா. அடியேனாகிய ஆத்மவஸ்து என்றபடியாமத்தனை. "சென்னாளெந்நாளந்நாள்" என்றது யாவதாத்மபாவி என்றபடி. ஆத்மாவுக்கு ஒருநாளும் அழிவில்லாமையாலே சாச்வதகாலமும் என்றதாயிற்று.

செலக்காண்கிற்பார்காணுமளவும் செல்லும்கீர்த்தியாய் *
உலப்பிலானே யெல்லாவுலகுமுடையவொருமூர்த்தி *
நலத்தால்மிக்கார் குடந்தைக்கிடந்தாய்! உன்னைக்காண்பான்நான்
அலப்பாய் *ஆகாசத்தைநோக்கி அழுவன்தொழுவனே.

| | |
|---|---|
| செல காண்கிற் பார் | - மேலே மேலே காணவல்லவர்கள் |
| காணும் அளவும் | - எவ்வளவு காண்பர்களோ அவ்வளவும் |
| செல்லும் கீர்த்தியாய் | - வளர்ந்து செல்கின்ற திருக்குணங்களையுடையவனே! |
| உலப்பு இலானே | - அந்தத் திருக்குணங்கட்கு முடிவு இல்லாதனனே! |
| எல்லா உலகும் உடைய | - எல்லாவுலகங்களுக்கும் ஸ்வாமியான |
| ஒரு மூர்த்தி | - ஒப்பற்ற தலைவனே! |
| நலத்தால் மிக்கார் குடந்தை | - பக்தி மிகுந்தவர்கள் வாழ்கிற திருக்குடந்தையிலே |
| கிடந்தாய் | - சயனித்தருள்பவனே |
| நான் உன்னை காண்பான் அலப்பு ஆய் | - நான் உன்னைக் காணவேண்டி அலமந்து |
| ஆகாசத்தை நோக்கி | - (நீ வருவதற்குரிய) வானத்தைப் பார்த்து |
| அழுவன் தொழுவன் | - அழுவதும் தொழுவதும் செய்யா நின்றேன். |

* பிரானே! என்போல்வார்க்காக நீ திருக்குடந்தையிலே ஸன்னிதி பண்ணியிருந்தும் நினைத்தபடி பரிமாற்றம் கிடையாமையாலே நான் நோவுபடாநின்றேனென்கிறார். முதலடியினால், நீ படைத்த புகழெல்லாம் பாழாய்ப் போகிறதே யென்று வயிறுபிடிக்கிறார். தமக்கு உதவாமையினாலே இங்ஙனே சொல்லுகிறபடி, எம்பெருமானுடைய கீர்த்திகளை (அதாவது ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை) யார் யார் எவ்வளவு பேசுகிறார்களோ அவை அவ்வவ்வளளாவாயிருக்கும். மந்தமதிகள் பேசப்புக்காலும் அவர்களது வாக்கிலே அடங்கி நிற்கும். மஹாமதிகள் பேசப்புக்காலும் அவர்களது திறமைக்குத் தக்கபடி கரை கட்டாக்காவேரிபோலே பெருகிச் சென்றிருக்கும்.

**உலப்பு இலானே!** -- உலப்பு முடிவு; அந்த குணவிபூதிகளினுடைய கணனைக்கு முடிவில்லாமலிருக்குமவனே! என்றபடி. எல்லாவுலகுமுடைய ஒரு மூர்த்தி! -- மூர்த்தியென்று திவ்யமங்கள விக்ரஹத்துக்கும் பெயர். வடிவழகைக் காட்டி எல்லா பிராணிகளையும் ஈடுபடுத்திக்கொள்ள வல்லவனே! என்றும், ஸகல லோகங்களுக்கும் நிர்வாஹகனான ஸர்வேச்வரனே; என்றும் பொருள்படும். என்னை நிர்வஹியாத உனக்கு ஸர்வேச்வரனென்று பெயர் தகுமாவென்று உறுத்திச் சொல்லுகிறபடி.

**(நலத்தால் மிக்கார் இத்யாதி)** நான் ஸ்ரீ வைகுண்டத்திலே காண ஆசைப்படுகிறேனோ? திருப்பாற்கடலிலே காண ஆசைப்படுகிறேனோ? என்றைக்கோ சென்ற ராமக்ருஷ்ணாதி அவதாரங்களிலே காண ஆசைப்படுகிறேனோ? அன்பர்களை விடமாட்டாதே திருக்குடந்தையிலே கிடக்கிற கிடையயையன்றோ நான் காண ஆசைப்படுகிறது! இது கிடையாமலே அலமந்து ஆகாசத்தை நோக்கி அழுவதும், தொழுவதும் செய்யாநின்றேன். கஜேந்திராழ்வானுக்கு உதவ ஆகாசத்தில் நின்றும் வந்து தோன்றினாப்போலே எனக்காகவும் வந்து தோன்றுகிறாயோவென்று ஆகாசத்தை நோக்குகிறேன்காண். சிறுவர்களைப்போலே அழுவது, பெரியார்களைப்போலே தொழுவது எல்லாம் செய்யா நின்றேன்.

"குடந்தைக் கிடந்தாய்! உன்னைக் காண்பான்" என்று திருக்குடந்தையில் கிடந்த கிடையைத்தானே இவர்காண ஆசைப்படுவது; நாமெல்லாரும் இது காணப்பெற்றிலோமோ? இவரும் இது காணத் தடையுண்டோ? அலமருகை எதற்காக? என்று சங்கிக்க வேண்டா. காண்கை யென்றால் நம்மைப்போலே காண்கையன்று இவர்க்கு அபிமதம். குளிர நோக்குதல், வினவுதல், தழுவுதல் எல்லாம் செய்யப்பெருகையே காண்கையாமிவர்க்கு.

அழுவன்தொழுவன் ஆடிக்காண்பன் பாடியலற்றுவன் *
தழுவல்வினையால் பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன் *
செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய்! செந்தாமரைக்கண்ணா!
தொழுவனேனையுனதாள் சேரும்வகையேசூழ்கண்டாய்.

| | |
|---|---|
| செழு ஒண் பழனம் | - செழுமை தங்கிய நீர்நிலங்களையுடைய |
| குடந்தை கிடந்தாய் | - திருக்குடந்தையிலே சயனித்தருள்பவனே! |
| செம் தாமரை கண்ணா | - செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடையவனே! |
| அழுவன் தொழுவன் | - அழுவேன் தொழுவேன்; |
| ஆடி காண்பன் | - நடனம் செய்து பார்ப்பேன்; |
| நாணி கவிழ்ந்து இருப்பன் | - வெட்கப்பட்டுத் தலைகவிழ்ந்திருப்பேன்! |
| தொழுவனேனை | - மிகுந்த அருவருப்பையுடையனான என்னை |
| பாடி அலற்றுவன் | - வாயாரப்பாடிப் பிரலாபனம் செய்வேன் |
| தழு வல் வினையால் | - என்னைத் தழுவிக்கொண்டிருக்கிற வலிய பாவத்தினாலே |
| பக்கம் நோக்கி | - (எந்தப் பக்கமாக நீ வருகிறாயோவென்று) எங்கும் பக்கந்தோறும் பார்த்து (எங்கும் வரக்காணாமையாலே) |
| உனதாள் சேரும் வகையே | - உன்திருவடியடையுமாறு |
| சூழ் கண்டாய் | - உபாயசிந்தை பண்ணவேணும் |

* பிரானே! உன் கண்ணழகிலே ஈடுபட்டுப் பலவகை ப்ரவ்ருத்திகளும் பண்ணின விடத்திலும் பயன் பெற்றிலேன். உன் திருவடிகளைச் சேரும்படி நீயே பார்த்தருளவேணுமென்கிறார்.

**அழுவன் தொழுவன்** -- சிறுவர் அழுகையினாலேயே எதையும் ஸாதிப்பார்கள். அறிவுடையார் தொழுகையினாலேயே எதையும் ஸாதிப்பார்கள். இருவர் படியையும் நான் ஏறிட்டுக்கொண்டு அழுவதும் தொழுவதும் செய்தாயிற்று. ஆடிக்காண்பன் --"இத்தனை சோறிடுகிறோம்; ஆடுகிறாயா?" என்றால், பெரும்பசியாளர் ஆடுவதுண்டே; அப்படி ஆடியும் பார்ப்பேன். **பாடியலற்றுவன்** -- சித்தப்ரமம் கொண்டவன் பாடுவதும் அலற்றுவதும் செய்யுமாப்போலே அவையும் செய்யா நின்றேன்.

**தழுவல்வினையால் பக்கம் நோக்கி நாணிக் கவிழ்ந்திருப்பன்** -- இங்கே வல்வினையென்று காதலைச் சொல்லுகிறது. வல்வினையின் பயனாக உண்டான காதல் என்றபடி. அபேக்ஷித்தபடி ஸித்தியாமையாலே காதலை வல்வினையாகக் கருதினாராயிற்று. என்னைத் தழுவிவிடாதே நிற்கிற காதலாகிற ப்ரபல பாபத்தாலே நீ வருவதாக நினைத்துப் பக்கங்களிலே பார்த்து, வந்து காட்சிதரக் காணாமையாலே லஜ்ஜையோடே கவிழ்தலையிட்டிருப்பேன் -- தலைகவிழ்ந்து நிற்பேன்.

தமக்கு ஆகவேண்டிய காரியத்தைப் பின்னடிகளால் விண்ணப்பஞ்செய்கிறார். (செழுவொண்பழன மித்யாதி.) செழுமைதங்கி அழகிய நீர் நிலைகளையுடைய திருக்குடந்தையிலே திருக்கண் வளர்ந்தருள்பவனே! எனக்கு ஜீவனமான திருக்கண்களையுடையவனே! புறம்பு புகலற்று உன்னாலல்லது செல்லாதபடி க்ருபணனான நான் உன் திருவடிகளைக் கிட்டுவதொரு விரகு நீயே ஆலோசித்தருளவேணுமென்றாராயிற்று.

சூழ்கண்டாயென்தொல்லைவினையையறுத்து உன்னடிசேரும்
ஊழ்கண்டிருந்தே *துராக்குழிதூர்த்து எனைநாளகன்றிருப்பன்?

வாழ்தொல்புழார்குடந்தைகிடந்தாய்! வானோர்கோமானே! *
யாழினிசையே ! அமுதே ! அறிவின்பயனே! அரியேறே!

| | |
|---|---|
| வாழ் தொல் புகழார் | - விளங்குகின்ற அநாதியான புகழையுடையார் வர்த்திக்கிற |
| குடந்தை | - திருக்குடந்தையிலே |
| கிடந்தாய் | - சயனித்தருள்பவனே! |
| வானோர் கோமானே | - நித்யஸூரிநாதனே! |
| யாழின் இசையே | - வீணாகானம்போலே பரமபோக்யனானவனே! |
| அமுதே | - அமிருதம் போன்றவனே! |
| அறிவின் பயனே | - அறிவுக்குப் பலனானவனே! |
| அரி ஏறே | - சிங்கமும் இடபமும் போன்று சிறந்தவனே! |
| உன் அடி சேரும் | |
| ஊழ் கண்டு இருந்து | - நான் உனது திருவடிகளை யடையும்படியான முறைமையைக் கண்டிருந்தும் |
| தூரா குழி தூர்த்து | - ஒருநாளும் தூர்க்கவொண்ணாத இந்திரியக்குழிகளை நிறைத்துக்கொண்டு |
| எனைநாள் அகன்று இருப்பன் | - எத்தனை காலம் உன்னை விட்டுப் பிரிந்திருப்பேன்? |
| என்தொல்லை வினையை அறுத்து | - (இப்படி அகன்றிருக்கைக்குக் காரணமான) எனது அனாதி பாபங்களைத் தொலைத்து |
| சூழ் கண்டாய் | - என்னை ஸ்வீகரித்தருளவேணும். |

* பிரானே! உன்னுடைய போக்யதையிலே அகப்பட்டிருந்துள்ள வெனக்கு ஓர் உபகாரம் செய்தருளவேணும். உன்னைப் பெறுதற்கு இடையீறான தொல்வினைகளையெல்லாம் தொலைத்தருளி உன்னைப் பெறுவதொரு நல் விரகு பார்த்தருளவேணும் என்கிறார்.

நீ எழுந்தருளியிருக்குமிடமான திருக்குடந்தையானது சிறந்த கீர்த்தி யாதென்னில்; உன்னைப் பெறுதற்கு விரோதியான கரும பந்தங்களெல்லாம் கழியப்பெற்றவர்கள் என்னுங்கீர்த்தியாம். அத்தகைய கீர்த்தி வாய்ந்தவர்கள் வாழுமிடத்தே நீயிருந்து வைத்து எனக்கு அந்தக் கீர்த்தியை விளைக்காதொழியத்தகுமோ? (**வானோர் கோமானே!**) நித்தியர்களையும் முக்தர்களையும் போலே எம்மை அடிமைகொள்ளவேண்டாவோ? (**யாழினிசையே அமுதே**) உன்னுடைய யோக்யதையை நான் அறியப்பெறாதிருந்தேனாகில் இங்ஙனே கிடந்து துடிப்பேனா? யாழின் இசைதானே வடிவெடுத்தாற்போலேயன்றோ உன்னுடைய இனிமைதான் இருப்பது. அமுதமும் எனக்கு நீயேயன்றோ. (**அறிவின் பயனே**) *ந போதாத் அபரம் சுகம் *என்கிறபடியே அறிவுக்குப் பலன் சுகமாகையாலே என்னுடைய ஸுகமே வடிவெடுத்திருப்பவனே! என்றபடி. (**அரியேறே**) **அரி** = சிங்கம். **ஏறு** = ரிஷபம். இவ்விரண்டும் சிறப்புக்கு வாசகங்கள். '**புருஷர்ஷபம்**' என்பர்களன்றோ? மிகச்சிறந்தவனே என்றபடி.

அரியேறே! என்னம்பொற்சுடரே! செங்கண்கருமுகிலே! *
எரியேபவளக்குன்றே! நால்தோளெந்தாய்! உனதருளே*
பிரியாவடிமையென்னைக்கொண்டாய்! குடந்தைத் திருமாலே! *
தரியேனியுன்சரணம்தந்து என்சன்மம்களையாயே.

அரி ஏறே - சிறந்த சிங்கமே!

| | |
|---|---|
| என் | - நான் அனுபவித்தற்குரிய |
| அம் பொன் சுடரே | - அழகிய பொன்போன்ற ஒளியுருவனே! |
| செம் கண் கருமுகிலே | - சிவந்த கண்களையுடைய காளமேகம் போன்றவனே! |
| எரி ஏய் பவளம் குன்றே | - நக்ஷத்திர மண்டலத்தளவும் ஓங்கின பவளமலை போன்றவனே! |
| நால் தோள் எந்தாய் | - சதுர்புஜ ஸ்வாமியே! |
| உனது அருளே | - உனது கிருபையினால் |
| என்னை பிரியா | |
| அடிமை கொண்டாய் | - என்னை அத்தாணிச் சேவகங் கொண்டவனே! |
| குடந்தை திருமாலே | - திருக்குடந்தையில் வாழும் திருமாலே! |
| இனி தரியேன் | - இனிமேல் நான் தரித்திருக்கில்லேன் |
| உன் சரணம் | - உனது திருவடிகளைக் கொடுத்தருளி |
| என் சன்மம் களையாய் | - எனது சரீரத்தொடர்பைத் தவிர்த்தருளவேணும். |

* பிரானே! உன்னுடைய வைலக்ஷண்யத்தை நீயே காட்டித் தந்து அடிமையிலே என்னை ஊன்றவைத்தாயானபின்பு உன்திருவடிகளைத்தந்து தீரவேணுமன்றோ. தந்து பின்னை ஸம்ஸாரத்தைக் களைந்தொழியாய் என்கிறார். மேனாணிப்புத்தோற்ற விருக்குமிருப்பை **அரியேறே!** என்ற விளி காட்டும். அந்த மேனாணிப்புக்குத் தகுதியான வடிவுபடைத்தவனென்கிறது **அம்பொற்சுடரே!** என்பது. விலக்ஷணமான பொன்போலே ஸ்ப்ருஹணீயமான ஒளியையுடையவனே! என்றபடி. **செங்கட்கருமுகிலே!** -- வாத்ஸல்யமாகிற அம்ருதத்தை வர்ஷிக்கிற திருக்கண்களையுடையவனே! என்றபடி.

**எரியேபவளக்குன்றே!** -- எரியென்று கேட்டை நக்ஷத்திரத்திற்கு வாசகமாய் நயுத்ரஸாமாந்யத்தைச் சொல்லி நிற்கும். நக்ஷத்ரமண்டலத்தளவும் ஓங்கியிருக்கிற பவளக்குன்றுபோலே (பவழமயமான மலைபோலே) விலக்ஷணமான வடிவு படைத்தவனே! உகவாதார்க்கு அநுபவிக்க வொண்ணாமையும் உகந்தார்க்குப் பரமபோக்யனாயிருக்கையும் இத்தால் நினைக்கிறது. **நால்தோளெந்தாய்!** கல்பகதரு பணைத்தாற் போலேயிருக்கிற திருத்தோள்களைக் காட்டி என்னை அநந்யார்ஹசேஷப்படுத்திக்கொண்டவனே! என்கை. எம்பெருமானுடைய திருத்தோள்கள் நம்மாழ்வாருடைய திருவாக்கில் நுழைந்து புறப்பட்டவாறே விலக்ஷணமானவொரு பெருமைபெறும். ஐயங்கார் திருவரங்கக் கலம்பகத்தில் "அருமறைதுணிந்த பொருள்முடிவை யின்சொலமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பியருளிய சடகோபர் சொற்பெற்றுயர்ந்தன -- அழகிய மணவாளர் கொற்றப்புயங்களே" என்று பணித்ததுகாண்க. உனதருளே பிரியாவடிமை யென்னைக்கொண்டாய் -- உன்னுடைய க்ருபையாலே மாத்திரம் என்னை அத்தாணிச் சேவகத்திற்கு ஆளாக்கிக்கொண்டவனே! குடந்தைத் திருமாலே என்னை மாத்திரமன்றிக்கே என்போல்வாரையும் அடிமை கொள்ளுகைக்காகத் திருக்குடந்தையிலே பெரிய பிராட்டியாரோடு கூட வாழ்பவனே! **இனித்தரியேன்** -- இந்தச் சேர்த்தியழகை நான் காணப்பெற்ற பின்பு இனி ஆறியிருக்க விரகுண்டோ? மாதாபிதாக்கள் அருகேயிருக்க, அவர்கள் ஸ்ரீமான்களாய் உதாரமாயிருக்க, ப்ரஜை பசித்துத் தரித்திருக்கமுடியுமோ? **உன் சரணம்தந்து என் சன்மம் களையாய்** -- ப்ரஜைகளின் வாயிலே முலையைக்கொடுத்து சிகித்ஸை பண்ணுமாபோலே முன்னம் திருவடிகளைத் தந்து பின்னை ஜன்மஸம்பந்தத்தை யறுக்கவேணும் என்கிறார் போலும்.

களைவாய்துன்பங்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன் *
வளைவாய்நேமிப்படையாய்! குடந்தைக்கிடந்தமாமாயா! *

தளராவுடலமெனதாவி சரிந்துபோம்போது *
இளையாதுனதாளொருங்கப்பிடித்துப் போதவிசைநீயே.

| | |
|---|---|
| வளை வாய் நேமி படையாய் | - வளைந்த வாயையுடைய திருவாழியை ஆயுதமாகவுடையவனே! |
| குடந்தை கிடந்த | - திருக்குடந்தையிலே சயனித்தருள்கின்ற |
| மா மாயா | - மஹாச்சர்ய ரூபனே! |
| துன்பம் களைவாய் | - எனது துன்பங்களை நீ களைந்தாலும் சரி |
| களையாதொழிவாய் | - களையாவிட்டாலும் சரி |
| களைகண் மற்று இலேன் | - வேறு சரணமுடையேனல்லேன் |
| உடலம் தளரா | - உடல் தளர்ந்து |
| எனது ஆவி | - என் உயிரானது |
| சரிந்து போம் போது | - நிலைகுலைந்து உத்க்ரமணமடையும்போது |
| இளையாது | - மெலியாமல் |
| உன தாள் | - உன் திருவடிகளையே |
| ஒருங்க பிடித்து போத | - ஒருமிக்கப் பிடித்துப் போகும்படி |
| நீயே இசை | - நீயே திருவுள்ளம் பற்றவேணும். |

* ப்ரபந்நர்கட்கு ஆகிஞ்சந்யம், அநந்யகதித்வம் என்ற இரண்டும் குலையாதிருக்கவேணும். உபாயாந்தரங்களில் அந்வயலேசமும் அற்றிருக்கை ஆகிஞ்சந்ய மெனப்படும். எம்பெருமான் பக்கலில் முகம் பெறாதொழியினும் பிறர்மனைதேடியோடப்பாராதே "ரக்ஷித்தபோதோடு ரக்ஷியாதபோதோடு வாசியற இவ்விடமொழிய வேறுபுகலில்லை" என்கிற திண்ணிய அத்யவஸாயத்துடனிருக்கை அநந்யகதித்வமெனப்படும். அது இப்பாட்டின் முதலடியில் தெளிவாகிறது. எனக்கு உன்னுடைய அனுபவம் கிடையாமற் போனாலும் உன் திருவடியே தஞ்சமென்று பிறந்த விச்வாஸம் குலையாதபடி பார்த்தருள வேணுமென்கிறார். துன்பம் களையாதொழிவாய், களைகண் மற்றிலேன் -- நீ சரமச்லோகத்தில் ***ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி** * என்று பிரதிஜ்ஞை பண்ணினபடி செய்தாலும் செய், தவிர்ந்தாலும் தவிர். உன் காரியத்தில் நீ எப்படியிருந்தாலும், என் காரியத்தில் நான் நிஷ்டை குலையமாட்டேன். **வளைவாய் நேமிப்படையாய்** -- *நம்மேல் வினைகடிவான்- எப்போதும் கைகழலாநேமியான் * என்றன்றோ எம் போல்வாருடைய உறுதியிருப்பது. உன் கையிலே ஆயுதமிருந்தும் துன்பம் களையாதிருத்தல் தகுதியோ? **குடந்தைக்கிடந்த மாமாயா** -- திருக்குடந்தையிலே வந்து ஆச்சரியமான அழகோடே திருக்கண் வளர்ந்தருளுகிறது எதற்காக?

தளராவுடலம் -- 'உடலம் தளரா' என்று அந்வயிப்பது. தளரா வென்பது செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம். தளர்ந்து என்றபடி. எனது சரீரமானது கட்டுக்குலைந்து என் பிராணன் முடிந்து போமளவு இதுவாயிற்று. (**இளையாது இத்யாதி**) அபேக்ஷிதம் பெறுகிறேன், இல்லை, அது தனிப்பட்ட விஷயம். நான் உன் திருவடிகளைப் பற்றின பற்று நெகிழாமற் பண்ணியருளவேணுமென்கிறாராயிற்று. **ஒருங்க** =நிரந்தரமாக என்றபடி.

இசைவித்தென்னை யுன்தாளிணைக்கீழ் இருத்துமம்மானே! *
அசைவிலமரர்தலைவர்தலைவா! ஆதிப்பெருமூர்த்தி! *
திசைவில்வீசும்செழுமாமணிக்ள்சேரும் திருக்குடந்தை*
அசைவிலுலகம்பரவக்கிடந்தாய்! காணவாராயே.

| | |
|---|---|
| என்னை | - நெடுநாள் விமுகனாயிருந்த வென்னை |
| இசைவித்து | - அடிமைக்கு இசையும்படி செய்து |
| உன் தாள் இணை கீழ் | - உனது உபயபாதங்களின் கீழே |
| இருத்தும் அம்மானே | - தங்கும்படி செய்தருளின ஸ்வாமியே! |
| அசைவுஇல் அமரர்தலைவர் | - நித்யஸூரிகளுக்குள் தலைவரான அநந்தகருட விஷ்வக்ஸேனர்களுக்கும் |
| தலைவா | - முதல்வனே! |
| ஆதி பெரு மூர்த்தி | - ஸகலத் ஜகத்காரணபூதமான திவ்ய விக்ரஹத்தையுடையவனே! |
| திசைவில் வீசும் | |
| செழுமாமணிகள் சேரும் | - எங்கும் ஒளிவீசுகின்ற மிகச் சிறந்த ரத்னங்கள் சேருமிடமான |
| திரு குடந்தை | - திருக்குடந்தையிலே |
| அசைவு இல் | - ஓய்வில்லாதபடி (அநவரதம்) |
| உலகம் பரவ | - உலகமெல்லாம் துதிக்கும்படி |
| கிடந்தாய் | - சயனித்தருள்பவனே! |
| காண வாராய் | - நான் கண்டு அநுபவிக்கும்படி வரவேணும். |

* கண்ணாலே காணலாம்படி வரவேணுமென்கிறார். இதில் முதலடியில் ஸத்ஸம்ப்ரதாயார்த்தஸாரம் பொதிந்து கிடக்கிறது ஆசார்ய ஹ்ருதயத்தில் "மதியாவிசைந்தோ மென்னும் அநுமதீச்சைகள் இருத்துவ மென்னாத வென்னை யிசைவித்த வென்னிசைவினது" என்ற சூர்ணிகை இங்கே அநுஸந்தேயம். இதன் கருத்தாவது :- ஆழ்வார்க்கு எம்பெருமான் திறத்திலே யுண்டான ஆபிமுக்யம் எம்பெருமானுடைய க்ருஷியினாலேயே உண்டானதத்தனை. * வைத்தேன் மதியாலெனதுள்ளத்தகத்தே * என்று தமக்கு அநுமதியிருப்பதாகச் சொல்லியிருக்கிறாரே ஆழ்வார். *யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம் * என்று தமக்கு இசைவும் இருப்பதாகச் சொல்லியிருக்கிறாரே. அந்த அநுமதியும் இச்சையும் பகவத் விஷயீகாரத்தைக் குறித்து ஹேதுவானாலோ வென்னில்; ஆகாது. அவையும் எம்பெருமானுடைய க்ருஷிபலமென்னுமிடம் *யானொட்டி யென்னுளிருத்துவ மென்றிலன் * இசைவித்தென்னையுன் தாளிணைக்கீழிருத்துமம்மானே *என்னிசைவினை * என்பது முதலான தம்முடைய அருளிச் செயல்களினாலேயே விளங்குமென்றபடி.

**இசைவித்து என்னை** என்கையாலே நெடுநாள் திருவடிஸேவைக்கு இசையாதிருந்த தம்மை எம்பெருமான் தானே வருந்தி யிசைவித்தமை ஸ்பஷ்டமாக விளங்கும். திசைவில் வீசும் செழுமாமணிகள் என்று திருமழிசையாழ்வார் போல்வாரைச் சொல்லுகிறதென்று ஸம்ப்ரதாயம். திசைகள் தோறும் பரந்த புகழையுடைய மஹாஜ்ஞாதாக்கள் சேருமிடமான திருக்குடந்தை யென்கை. இங்கே ஈட்டுஸூக்தி :- "ஆராவமுதாழ்வார் திருமழிசைப்பிரான் போல்வார் புருஷரத்னங்கள் சேரும் திருக்குடந்தை யென்று நிர்வஹிப்பர்கள்" என்று "அசைவிலுலகம் பரவ" என்றவிடத்து 'அசைவில்' என்பதை ஏழாம் வேற்றுமையாகக் கொண்டு, "எழுந்திருந்து பேசு" என்று ப்ரார்த்தித்த திருமழிசையாழ்வார்க்காக அசைந்துகொடுத்த முதிஹ்யத்தை யநுஸந்திப்பதுமுண்டு.

வாராவருவாய்வருமென்மாயா! மாயாமூர்த்தியாய்!*
ஆராவமுதாய் அடியேனாவி அகமேதித்திப்பாய் *
தீராவினைகள்தீர என்னையாண்டாய்! திருக்குடந்தை
யூரா! *உனக்காட்பட்டும் அடியேனின்னமுழல்வேனோ?

| | |
|---|---|
| வாரா | - திருவுருவத்தோடு வாராமல் |
| அரு ஆய் வரும் | - அரூபியாய் உள்ளேவந்து |
| என் மாயா | - என் மாயவனே! |
| மாயா மூர்த்தி யாய் | - ஒருகாலும் அழியாத திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையவனே! |
| ஆரா அமுது ஆய் | - எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்தி பிறவாத அமிருதமாய்க் கொண்டு |
| அடியேன் ஆவி அகமே தித்திப்பாய் | - என் உள்ளுக்குள்ளே தித்தித்திருக்குமவனே । |
| தீரா வினைகள் தீர | - தொலையாத பாவங்கள் தொலையும்படியாக |
| என்னை ஆண்டாய் | - அடியேனை ஆண்டருளினவனே! |
| திரு குடந்தை ஊரா | - திருக்குடந்தைப் பதியோனே! |
| அடியேன் | - அடியேன் |
| உனக்கு ஆள் பட்டும் | - உனக்கு அடிமைப் பட்டும் |
| இன்னம் உழல்வேனோ | - இன்னமும் கிலேசப்படுவேனோ! |

* திருக்குடந்தயிலே புகவே நம் அபேக்ஷிதங்களெல்லாம் பெறலாமென்று புக்க ஆழ்வார் அங்ஙனம் பெறாமையாலே இன்னம் எத்தனையிடம் தட்டித் திரியக்கடவேனோவென்கிறார். **வாரா அருவாய் வரும்** -- கண்ணுக்கு விஷயமாகி வாராதே அரூபித்ரவ்யமாய் வருகிறவனே! என்கை. வெளியில் கண்ணாலே கண்டு அநுபவிக்க வாராதே, மறந்து பிழைக்கவு மொண்ணாதபடி அந்தரங்கத்திலே அரூபியாய்க்கொண்டு ப்ரகாசிக்கிற ஆச்சர்யபூதனே!; **மாயா மூர்த்தியாய்** -- ஒருபோதும் ஒரு விதமான விகாரத்தையும் அடையாத வடிவுபடைத்தவனே!. கருமமடியான விகாரம் இல்லையென்கிறதத்தனை. ஆச்ரிதர் திறத்தில் அநுக்ரஹமடியாக விளையும் விகாரம் சாஸ்த்ர வரம்புக்குக் கட்டுப்பட்டதன்றே. ஆராவமுதமாய் அடியேனாவியகமே தித்திப்பாய்! -- எல்லார் வாயிலும் ஆராவமுது என்று வருகிறாப்போலேயோ என் வாயிலும் வருகிறபடி? *உளங்கனிந்திருக்குமடியவர் தங்கள் உள்ளத்துளூறிய தேனை * என்னுமாபோலே என்னுடைய அந்தரங்கம் அகப்படத் தித்திக்கும்படியை நானென்சொல்வேனென்கிறார்.

(**தீராவினைகள் இத்யாதி**) அநுபவித்தே தொலைக்கவேண்டிய வினைகளும் தொலையுமாறு என்னை யடிமைகொள்ளுகைக்குத் திருக்குடந்தையிலே வந்து நித்ய ஸன்னிதிபண்ணி யிருக்குமவனே! ஸம்ஸாரிகளை அநுபவிப்பிக்கவந்து கிடக்கிற வுனக்கு ஆட்பட்டும் இன்னும் என் ஆர்த்தி தீரப்பெற்றதில்லையே, தெரியவில்லையே என்கிறார்.

நான்காமடியின் முதற்சொல் **ஊரா!** என்றும் **ஊராய்!** என்றும் இருவகையிலும் பொருந்தும். ஊரன் என்பது விளியுறுபு ஏற்றால் 'ஊரா' என்றாகும்; ஊரான் என்பது விளியுருபு ஏற்றால் ஊராய் என்றாகும்.

உழலையென்பின் பேய்ச்சிமுலையூடு அவளையுயிருண்டான் *
கழல்களவையேசரணாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன் *
குழலின்மலியச்சொன்ன ஓராயிரத்துளிப்பத்தும் *
மழலைதீரவல்லார் காமர்மானேய்நோக்கியர்க்கே.

உழலை என்பின் பேய்ச்சி - உழல்தடிபோன்ற எலும்புகளையுடையளான பூதனையினுடைய

| | |
|---|---|
| முலை ஊடு | - முலைவழியாக |
| அவள் உயிரை உண்டான் | - அவளது உயிரை முடித்த பெருமானுடைய |
| கழல்கள் அவையே | - திருவடிகளையே |
| சரண் ஆக கொண்ட | - சரணமாகப் பற்றின |
| குருகூர் சடகோபன் | - ஆழ்வார் |
| குழலில் மலிய | - குழலோசையிற் காட்டிலும் இனிதாக |
| சொன்ன | - அருளிச்செய்த |
| ஓர் ஆயிரத்துள் | - ஒப்பற்ற ஆயித்தினுள்ளே |
| இ பத்தும் | - இப்பதிகத்தை |
| மழலை தீர | - தமது அறியாமை தொலையும்படி |
| வல்லார் | - அதிகரிக்கவல்லவர்கள் |
| மான் ஏய் நோக்கியர்க்கு | - மான்போன்ற நோக்கையுடைய திவ்யாப்ஸரஸ்ஸுக்களுக்கு |
| காமர் | - ஆதரிக்கத் தகக்வராவர். |

* இப்பதிகம் பழுதறக் கற்கவல்லார் காமினிகளுக்குக் காமுகர்போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யராவர் என்று பலனுரைத்துத் தலைக்கட்டுகிறார். பூதனை முலையுண்டு அவளை முடித்து விரோதி நிரஸநசீலனென்று புகழ்பெற்ற கண்ணபிரானுடைய திருவடிகளையே தஞ்சமாகக் கொண்ட ஆழ்வார், திருக்குழலோசையிற் காட்டிலும் அதிசயித்ததாம்படி யருளிச்செய்த ஆயிரம் பாசுரத்தில் இப்பத்தையும் ஊற்றத்துடனே சொல்லவல்லார்களை எம்பெருமானும் ஸ்ரீவைஷ்ணவர்களும் மேல்விழுந்து கோக்யராகக் கொள்வர்கள் என்றதாயிற்று.

மூலத்தில் "காமர்மானேய் நோக்கியர்க்கு" என்று இவ்வளவே யிருப்பதால் மானேய் நோக்கியரான ஸ்த்ரீகளுக்கு விரும்பத்தக்கவராவர் என்று பொருள்படவேண்டாவோ என்று சங்கிக்கலாகாது. *தூராக்குழிதூர்த்து எனைநாளகன்றிருப்பன் *என்றுநாலு பாசுரங்களுக்கு முன்னே அருளிச்செய்த பரமவிரக்தாக்ரேஸரான ஆழ்வார் அதற்குப் பொருந்தாதபடி பலச்ருதி சொல்லார். ஆகவே, அது உவமையைக் காட்டினதத்தனை. உவமைக்கு வாசகமான சொல் இல்லையே என்று கேட்கவேண்டா. *தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே * என்றது காண்க. தாமரைபோன்ற திருவடிகளைச் சொல்லவேண்டுமிடத்துத் தாமரையென்றே சொன்னதுபோலவாம். அன்றியே, திருநாட்டிலுள்ள அப்ஸரஸ்ஸுக்களால் விரும்பி ஆதரிக்கப் பெறுவர்கள் என்றுமாம். இது எளிதான பொருளென்று பதவுரையில் காட்டப்பட்டது.

எட்டாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.
ஆழ்வார் திருவடிகளே சரணம்.